# 3000 ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா





ஜான் வில்சன்

தமிழாக்கம் : டாக்டர் ப.காளிமுத்து

# 3000 ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா

ஜான் வில்சன்

தமிழாக்கம் : டாக்டர் ப.காளிமுத்து

வெளியீடு

பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம்



தேசிய தர மதிப்பீடு பெற்றது

# 3000 ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா

ஆசிரியர் : **ஜான் வில்சன்**

**தமிழாக்கம் : டாக்டர் ப.காளிமுத்து**

**அச்சு:**
முதல் பதிப்பு : **[ஆங்கிலம்]: 1858**
**தமிழாக்க முதல் பதிப்பு : 2016**
**நான்காம் பதிப்பு : 2019**

**கிண்டில்:**
முதல் பதிப்பு : **2021**

**வெளியீடு மற்றும் உரிமை:**

**திராவிடர் கழக [இயக்க] வெளியீடு**
பெரியார் திடல், எண்.84/1, ஈ.வெ.கி. சம்பத் சாலை,
வேப்பேரி, சென்னை - 600007
தொலைபேசி: +91-44-26618161 தொலைநகல்: +91-44-26618866

**அச்சிட்ட புத்தகங்கள் கிடைக்குமிடங்கள்:**

**பெரியார் புத்தக நிலையம்**
- 84/1 [50], ஈ.வெ.கி. சம்பத் சாலை, வேப்பேரி, சென்னை -7, தொலைபேசி: +91-44-26618162
- பெரியார் மாளிகை, புத்தூர், திருச்சி - 620 017, தொலைபேசி: 0431 - 2771815
- வலைதளம்: www.dravidianbookhouse.com

# INDIA THREE THOUSAND YEARS AGO

or

The Social State of the A'ryas on the Banks of the INDUS in the times of the Vedas

By:

JOHN WILSON, D.D.F.R.S.

(Honarary Prsident of the Bombay branch of the Royal Asiatic Society and missionary of the free Church of Scotland)



JOHN WILSON, D.D., F.R.S.

*Moderator of the General Assembly of the Free Church of Scotl.*

கர்னல் பேரா. **நல்.இராமச்சந்திரன்**
எம்.இ., பி.எச்டி., எப்ஐஇ., எப்ஐவி., எப்ஐஎஸ்டிஇ
துணை வேந்தர்

பெரியார் நகர், வல்லம், தஞ்சாவூர்-613 403. தமிழ்நாடு. இந்தியா
தொலைபேசி : +91-4362-264800 தொலைப்பதிவு: +91-4362-264660
மின்னணு தொடர்பி : vc@pmu.edu இணையம் : www.pmu.edu

பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம்
(யூஜிசி சட்டம், 1956-பிரிவுன் 3ன் கீழ் இயங்குகிறது)
**தேசிய தர மதிப்பீடு பெற்றது**



## வாழ்த்துச் செய்தி

"மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா" என்னும் நூல் மிகச் சிறந்த ஆராய்ச்சி நூலாகும். சமற்கிருத இலக்கியங்களையும் ஆதி வேதங்களையும் ஆராய்ந்து, தொன்மைக்கால இந்தியாவின் வரலாற்றை வரைவதற்கு அவற்றை அடிப்படை ஆதாரங்களாகக் கொண்டுள்ளார் ஆசிரியர் ஜான் வில்சன். சென்ற நூற்றாண்டில் புகழ்பெற்று விளங்கிய பம்பாய் ராயல் ஏசியாடிக் சொசைட்டி என்னும் நிறுவனத்தின் தலைவராக இருந்து சிறந்த பணிகளைச் செய்தவர் ஜான் வில்சன்.

ஆதியில் இந்திய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர்களில் ஜான் வில்சன் குறிப்பிடத்தக்கவர். "சிறந்த ஆய்வாளர்" என்பவர் நடுநிலையோடு நின்று தாம் கண்டறிந்த உண்மைகளைத் துணிவோடு வெளியிட வேண்டும். அத்தகைய அரும்பணியை ஜான் வில்சன் தெளிவாகச் செய்திருக்கிறார். இந்த நூல் ஒரு நல்ல நண்பனாக வாசகர்க்கு வழிகாட்டும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

1858-இல் ஆங்கிலத்தில் வெளிவந்த ஜான் வில்சன் நூலை நல்ல தமிழில் மொழிபெயர்த்துள்ள பேராசிரியர்ப.காளிமுத்து அவர்களைப் பாராட்டுகிறேன். பெரியார் சிந்தனை உயராய்வு மய்யத்தின் சார்பில் உருவாக்கப்பட்டுள்ள இந்த நூலைப் பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறது. பெரியார் சிந்தனை உயராய்வு மய்யம் இதைப்போன்று இன்னும் பல நூல்களை வெளிக்கொணர வேண்டுமென அத்துறைப் பேராசிரியர்களையும் ஆய்வாளர்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

நல்வாழ்த்துக்கள்.

26.7.16

துணை வேந்தர்

## மொழிபெயர்ப்பாளரைப் பற்றி ...



பேராசிரியர் முனைவர் ப.காளிமுத்து, மதுரைத் தியாகராசர் கல்லூரியிலும் சென்னை மாநிலக் கல்லூரியிலும் பயின்றவர். தடைகளை உடைத்தெறிந்து தந்தை பெரியாரை மாநிலக் கல்லூரிக்கு அழைத்துச் சென்று பேச வைத்தவர். தந்தை பெரியார் முன்னிலையில் சென்னையில் தமிழர் தலைவரைப் புரவலராகக் கொண்டு பகுத்தறிவாளர் கழகம் தொடங்கப்பெற்றபோது அதன் செயற்குழு உறுப்பினராக இருந்தவர். மொழிப் போராட்ட வீரர். நெருக்கடி நிலைக்காலத்தில் பேராசிரியர் பணியிலிருந்து நீக்கம் செய்யப்பட்டுப் பழிவாங்கப்பட்டவர்.

தந்தை பெரியார் மீதும் தமிழர் தலைவர் மீதும் மாறாப் பற்றுள்ளம் கொண்டவர். தமிழில் ஆரியமோ அயல் மொழியோ கலப்பதை வெறுப்பவர். தமிழும் ஆங்கிலமும் அறிந்தவர். குறிப்புப் பொருள் கோட்பாடுகள் என்பது இவரது முதல் நூலாகும். மனுதரும் சாத்திரத்தை ஆய்வு செய்து மனுநீதி – ஒரு மறு பார்வை என்ற நூலை எழுதியவர். அகநானூற்றை ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர். நூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளின் ஆசிரியராகவும், மொழிபெயர்ப்பாளராகவும் விளங்குகிறார். திராவிடர் வரலாற்று ஆய்வு மய்யத்தின் செயற்குழு உறுப்பினராகவும் இருந்து பங்காற்றி வருகிறார்.

உலகத் தத்துவச் சிந்தனையாளர்களும் தந்தை பெரியாரும் – ஓர் ஒப்பியல் ஆய்வு, சிவாஜி முடிசூட்டலும் பார்ப்பனியமும் போன்ற நூல்களையும், மாட்டுக் கறியும் மதவெறியும், காந்தியார் படுகொலை அதிர்ச்சியூட்டும் தகவல் போன்ற நூல்களில் முக்கிய பகுதிகளையும் தமிழில் மொழிபெயர்த்தவர்.

## முன்னுரை

1850 – அது ஆங்கிலேயரின் ஆட்சிக் காலம்! அய்ரோப்பிய ஆராய்ச்சி அணுகு முறைகள் இந்தியாவில் காலூன்றத் தொடங்கியிருந்த காலம் அது. இவ்வாராய்ச்சி அணுகு முறைகளைப் பயன்படுத்தி இண்டஸ் ஆறு பாய்ந்தோடி வளப்படுத்திய சமவெளிப் பகுதிகளில் (சிந்து சமவெளி) வாழ்ந்த தொன் முது குடிமக்களைப் பற்றியும் இண்டஸ் ஆற்றின் கரையிலும் அதன் கிளையாறுகளின் கரைகளிலும் அயல் நாட்டிலிருந்து வந்து குடியேறிய ஆரியர்களைப் பற்றியும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. ஆரியர்களின் (சமற்கிருத) வேதங்கள் இதிகாசங்கள் முதலானவை ஆய்வுக்குட்படுத்தப்பட்டன. இத்தகைய வேத, இதிகாச ஆய்வுகளை மேற்கொண்ட ஆராய்ச்சியாளர்களுக்கு ஆங்கிலேய அரசின் ஆளுநர்களும் கிழக்கிந்தியக் குழுமத்தாரும் பெருமளவில் பொருளுதவி செய்துவந்தனர். ரிக் வேதத்தின் மூன்று தொகுதிகளை உரையுடன் கிழக்கிந்தியக் கம்பெனி வெளியிட்டிருக்கிறது!

இதே காலப் பகுதியில் (1850) தமிழகத்தின் தென் கோடியில் ஒரு சிற்றூரில் தங்கி எவருடைய பொருளுதவியுமின்றி டாக்டர் கால்டுவெல் திராவிட மொழிகளைப் பற்றி ஆராய்ந்து 1856–இல் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் ஒப்பரிய நூலை ஆங்கிலத்தில் வெளியிட்டார்.

1858–இல் பம்பாய் மாநிலத்தின் ஆளுநராக இருந்த ஜான் எல்ஃபின்ஸ்டன் வரலாறு தொல்லியல், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றில் மிகுந்த நாட்டம் கொண்டவர். இவருடைய அறிவுரையின்படி ஜான் வில்சன் எனும் அறிஞர் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியாவைப் பற்றிய ஓர் ஆய்வை மேற்கொண்டார்.

ஜான் வில்சன் ஸ்காட்லாந்து தேவாலயத்தோடு இணைந்த கிறித்துவ மதப் பரப்புரை யாளர். ஸ்காட்லாந்தைத் தாயகமாகக் கொண்ட வில்சன் தொன்மைக் கால வரலாறு, வேதங்கள், இதிகாசங்கள், ஆரியர்களின் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை ஆராய்வதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். 1850–களில் பம்பாயில் புகழ் பெற்று விளங்கிய ராயல் ஏசியாடிக் சொசைட்டி என்னும் அமைப்பின் மதிப்புறு தலைவராக இருந்து அரும்பணியாற்றியவர் வில்சன். 1858–ஆம் ஆண்டு பம்பாய் நகர மன்ற அரங்கில் வில்சன் நிகழ்த்திய சொற்பொழிவே மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா அல்லது இண்டஸ் ஆற்றின் கரையில் இருந்த வேதகாலத்து ஆரியர்களின் சமூக நிலை ('India Three Thousand

Years Ago or The Social State of the Aryans on the Banks of the INDUS in the times of the vedas ] என்னும் தலைப்பில் நூல் வடிவம் பெற்றுள்ளது. இந்த நூலின் முதற் பதிப்பு 1858-அக்டோபரில் வெளிவந்துள்ளது. அதன் பின்னர் இதன் மறுபதிப்பு 127 ஆண்டுகள் கழித்து 1985-இல் பயனீர் புத்தகப் பணி மய்யத்தின் [சென்னை-35] சார்பில் திரு.என்.குமாரசாமி அவர்களால் வெளியிடப் பெற்றுள்ளது. இரண்டாம் பதிப்பு வெளிவருவதற்கு இவ்வளவு கால இடைவெளி ஏன் ஏற்பட்டது? அரிய செய்திகள் பலவற்றின் ஆவணக் காப்பகமாக விளங்கும் இந்த ஆராய்ச்சி நூல் இரண்டாம் பதிப்பைக் காண்பதற்கு இவ்வளவு கால இடைவெளி ஏன் ஏற்பட்டது?

ஆரியர்களைப் பற்றியும் அவர்களின் வேதங்களைப் பற்றியும் திடுக்கிட வைக்கும் பல வரலாற்று உண்மைகளை இந்த நூல் அம்பலப்படுத்துவதே இதற்குக் காரணமாக இருக்கலாம் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. இந்த நூலை ஊன்றிப் படிப்போர் இந்த உண்மையை உணர்ந்து கொள்ளலாம். இந்த ஆய்வின் விளைவாக இந்திய வரலாற்றில் இதுவரை மறைக்கப்பட்ட பல உண்மைகள் வெளிச்சத்திற்கு வந்திருக்கின்றன.

தம்முடைய ஆய்வுக்கு வேதங்களின் மூலப் படிவங்களையே [ஆதியில் தொகுக்கப்பட்டவை] வில்சன் முதன்மைச் சான்றாதாரங் களாகக் கொண்டுள்ளார். கிடைத்தற்கரிய அவ்வேடுகளை ஒரு பார்ப்பனரே தமக்கு வழங்கியதாக வில்சன் குறிப்பிடுவது நம்மை வியப்பில் ஆழ்த்தும் செய்தியாகும்.

இண்டஸ் ஆறு பாய்ந்தோடிய நிலப்பரப்பு மட்டுமே ஆதி இந்தியாவாகும். இண்டஸ் [INDUS ] என்னும் சொல்லிலிருந்துதான் இந்தியா என்னும் பெயர் தோன்றியது. இண்டஸ் என்பது சமஸ்கிருதத்தில் சிந்தஸ் - சிந்து என்று கூறப்பட்டது. இங்கு வாழ்ந்த பழங்குடி மக்கள் மனிதக் குடும்பத்தின் மூல இனத்தைச் சேர்ந்தவர்கள் என்கிறார் வில்சன்.

இண்டஸ் ஆறும் அதன் கிளை ஆறுகளும் பாய்ந்தோடி வளப்படுத்திய சமவெளிப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் சிறந்த நாகரிகமுடையவர்களாக இருந்தார்கள். இவர்கள் ஜாதி என்பதை அறியாதவர்கள். மதச் சடங்குகளை வெறுத்தவர்கள்; மதச் சடங்கு செய்தவர்களை விரட்டியடித்தவர்கள்! அது ஒரு காலம்!

இத்தகைய ஆறுகளின் கரைகளில் ஆரியர்களின் குடியேற்றம் நிகழ்ந்தபோது ஆரியர்களின் செயல்பாடுகளுக்கு மக்களிடையே எதிர்ப்பு

இருந்தது; ஆதலின் இப்பெரு நிலப்பரப்பில் வாழ்ந்த அரசர்களையும் அவர்களுக்குப் பொருளுதவி செய்து வந்த செல்வர்களையும் ஆரியர்கள் தங்கள் மாய வலையில் சிக்க வைத்தார்கள். காட்ட வேண்டியதைக் காட்டி அவர்களிடமிருந்து பெற வேண்டியதைப் பெற்றுக் கொண்டார்கள். புரோகிதமும் வேள்வியும் இவர்களின் போர்க் கருவிகளாக விளங்கின. புவியாண்ட மன்னர்கள் [தரப்பைப்] புல் தடுக்கி விழுந்தார்கள்:

அரசர்களின் வெற்றிக்காகவும் அவர்தம் கால்வழி மரபு செழித்தோங்கவும் பிராமணர்கள் யாகங்கள் நடத்திப் பெருஞ் செல்வத்தைச் சுரண்டிக் கொண்டார்கள். பிராமணரின் படிப்பும் கல்வியும் அவர்களுக்குப் படிப்படியாக மிகுந்த செல்வாக்கைப் பெற்றுக் கொடுத்தன. இது தொடர்ந்து வளர்ச்சியடைந்து கொண்டே வந்தது. அரசருக்கு அறிவுரை கூறும் அரச குருவாக இவர்கள் நியமிக்கப்பட்டார்கள். கடவுளரோடு இவர்கள் பெற்றிருந்ததாகக் கூறப்பட்ட சிறப்பான தொடர்பு இவர்களுக்குத் தனியானதொரு புனிதத் தன்மையைக் கொடுத்தது. பிராமணன் ஆட்சி செலுத்தும் நிலைக்கு உயர்ந்தான். இந்தத் தகுதியோடு நிலவுலகில் ஒரு கடவுளாகப் பிராமணன் தன்னை மாற்றிக் கொண்டான். பூதேவர்களாகப் பார்ப்பனர்கள் தங்களைத் தாங்களே உயர்த்திக் கொண்டார்கள்.என்று பிராமணர்கள் கடவுளரான கதையை வில்சன் விளக்குகிறார்.

வேள்வியின்போது ஆரியர்கள் குதிரைகள், மாடுகள் முதலான விலங்கு களைக் கொன்று உயிர்ப்பலி கொடுத்தனர். பலியிடப்பட்ட விலங்குகளின் இறைச்சியை அவர்களே எடுத்துக் கொண்டனர். வேள்விச் சாலைகளின் அருகிலேயே இறைச்சிக் கூடங்களை இவர்களுக்காக அரசர்கள் அமைத்துக் கொடுத்திருந்தனர். வேள்விக்காக மட்டுமல்லாது உணவிற்காகவும் ஆரியர்கள் தங்குதடையின்றி விலங்குகளைக் கொன்றார்கள். மாட்டிறைச்சியை ஆரியர்கள் விரும்பி உண்டனர். **உணவு வகைகளில் மிக உயர்ந்தது மாட்டிறைச்சியே என்று வேதங்கள் கூறுகின்றன** என்று வேதங்களை முழுமையாக ஆராய்ந்த ஆக்ஃபோர்டு பல்கலைக் கழக சமஸ்கிருதப் பேராசிரியர் மாக்சுமுல்லர் கூறுகிறார். ஜான் வில்சன் இக்கருத்தை வழிமொழிகின்றார்.

வேதங்களின் காலத்தில் பிரம்மா என்ற கடவுளைப் பற்றிய கருத்தோ அவருடைய முகம், தோள், தொடை, கால் முதலான இடங்களிலிருந்து நான்கு முதன்மையான ஜாதிகள் தோன்றி வளர்ந்தன என்னும் கருத்தோ இல்லை! இந்தக் கருத்தியலே அப்போது உருவாகவில்லை! வேதங்களில் எந்த இடத்திலும் பிரம்மாவை ஒரு கடவுளாகக் காண முடியவில்லை.

பிரம்மா என்பதற்கு வழிபாடு என்று பொருள்; அவ்வளவே!. தீண்டாமை, சூத்திரர், ஜாதிமுறை, மறுபிறப்பு, உடன் கட்டை ஏற்றுதல் [சதி] ஆகிய எவற்றையும் வேதங்களில் காணமுடியவில்லை. பிற்காலத்தில் வேதங்களுக்கு விளக்கவுரை எழுதிய பார்ப்பனர்கள் இவற்றை யெல்லாம் வேதங்களுக்கு இடையே நுழைத்துவிட்டார்கள். வரலாற்றைத் திரிப்பது மறைப்பது முடிந்தால் அழித்துவிடுவது என்பவை யெல்லாம் பார்ப்பனர்க்குக் கைவந்த கலையாயிற்றே!

தென்னாட்டில் ஆரியர்கள் ஊடுருவத் தொடங்கிய காலத்தில் இவர்களுக்குக் குடியிருப்புகளை அமைத்துக் கொடுத்து இவர்களை முதலில் வரவேற்றவர்கள் பாண்டிய மன்னர்களே என்கிறார் வில்சன். பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதி இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று தமிழ் மன்னர்கள் பார்ப்பனர்க்கு அடிமையாகி யாகங்களைச் செய்ததோடு தங்கள் பெயர்களோடு அதனைப் பட்டங்களாகவும் சேர்த்துக்கொண்டார்கள்! இதைவிடக் கொடுமை ஒன்றுண்டு; பாண்டிய மன்னன் ஒருவன் தன் பெயருக்கு முன்னால் சூத்திரன் எனும் பட்டத்தைச் சூட்டிக் கொண்டான்! [பாண்டியன் உக்கிரப்பெருவழுதி] உக்கிரன் என்றால் சூத்திரன் என்று பொருள் என்பதை வில்சன் இந்த நூலில் எடுத்துக் காட்டுகிறார். ஆக அவன் உக்கிரப் பெருவழுதி அல்ல; சூத்திரப் பெருவழுதி!

இந்தியாவின் வடமேற்கில் மொகஞ்சதாரோ – அரப்பா – சிந்து சமவெளி தொடங்கி, வடகிழக்கில் நாகலாந்து வரையிலும் தெற்கில் குமரிமலை வரையிலும் பரவியிருந்த ஒப்புயர்வற்ற ஒரு நாகரிகம் வந்தேறிகளான ஆரியர்களால் சீரழிவிற்குள்ளாகிய வரலாற்றை ஜான்வில்சன் இந்த நூலில் மிகத் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார். சிந்து சமவெளிப் பகுதிகளில் வாழ்ந்த மக்களை அறிஞர் வில்சன் பழங்குடி மக்கள் என்றே குறிப்பிடுகிறார். சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என்பதையும் அங்கு வாழ்ந்த மக்கள் திராவிடர்கள் என்பதையும் கண்டறிந்து உலகிற்குப் பறைசாற்றிய பெருமக்கள் சர் ஜான் மார்சல், ஈராஸ் பாதிரியார் போன்றோராவர். 1920–களில் தான் இந்த உண்மை வெளியாயிற்று. எனினும் டாக்டர் கால்டுவெல் 1856–லேயே திராவிடம் எனும் சொல்லை வழக்கிற்குக் கொண்டுவந்து விட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

எது எப்படி இருப்பினும் ஆரியர்கள் அயல்நாட்டிலிருந்து வந்தவர்கள் என்பதை அறிஞர் வில்சன் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கிறார். அது மட்டுமல்லாது காலந்தோறும் பார்ப்பனரல்லாத [திராவிட] மக்களுக்கு

அவர்கள் இழைத்த கொடுமைகளையெல்லாம் வில்சன் சான்றுகளோடு நிறுவியிருக்கிறார். நாம் இதுவரை அறிந்திராத திடுக்கிடத்தக்க பல உண்மைகளை ஜான் வில்சன் இந்த நூலில் துணிவோடு வெளிப்படுத்தியிருக்கிறார். அவருக்கு நன்றி சொல்வோம்.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கிய ஆரிய திராவிடப் போராட்டம் இன்னும் முடிந்தபாடில்லை. உலக வழக்கு அழிந்து ஒழிந்து போன ஆரியத்தை [சமற்கிருதத்தை] அரியணை ஏற்றுவதற்குப் பார்ப்பனர்கள் இமாலய முயற்சி களில் இறங்கியுள்ளனர். பார்ப்பனரின் முயற்சிகள் முறியடிக்கப் படவேண்டும். இதற்கான போராட்டத்தில் களத்தில் நிற்கும் தோழர்களுக்கு இந்த நூல் ஒரு கேடயம்!

கிடைத்தற்கரிய இந்த நூலினை மொழிபெயர்க்கும் நல்வாய்ப்பினை எமக்கு நல்கிய தமிழர் தலைவர் மதிப்பிற்குரிய ஆசிரியர் பெரியார் மணியம்மை பல்கலைக்கழகத்தின் வேந்தர் டாக்டர் கி.வீரமணி அய்யா அவர்களுக்கு உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். மொழி பெயர்ப்புப் பணியில் நான் ஈடுபட்டுக்கொண்டிருந்த காலத்தில் என்னை ஊக்கப்படுத்திய தோழர்கள் விடுதலை அச்சக மேலாளர் க.சரவணன், மஞ்சை வசந்தன், வை.கலையரசன் ஆகியோர்க்கு அன்பும் நன்றியும். பெரியார் மணியம்மை பல்கலைக் கழகப் பெரியார் சிந்தனை உயராய்வு மய்யத்தின் வெளியீடாக இந்த நூலை வெளியிடுவதற்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கிய துணைவேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும் எமது நன்றி உரியதாகும்.

**டாக்டர் ப.காளிமுத்து**

**15.07.2016**

**தஞ்சை**

# 3000 ஆண்டுகளுக்கு
# முற்பட்ட இந்தியா

தொன்மைக்கால இந்தியாவும் தற்கால இந்தியாவும் பரப்பளவிலும் அவற்றின் உற்பத்தியிலும் பெருத்த வேறுபாடுகளைப் பெற்றிருக்கின்றன. உலகின் பிற நாடுகளோடு அவை கொண்டிருக்கும் தொடர்புகளிலும் வேறுபாடு இருக்கின்றது. தற்கால இந்தியா, வடக்கில் இந்துகுஷ் இமயமலைத் தொடர் களையும் தெற்கில் சிலோன் [இலங்கைத் தீவையும் முழுமையாக உள்ளடக்கி யிருக்கிறது. மேற்கில் சிந்து, குஜராத், கொங்கன், மலபார் கடற்கரைப் பகுதிகள் முதல், கிழக்கில் சீனா, பர்மா, ஒரிசா, கொரமண்டல் கடற்கரைப் பகுதிகள் முழுவதும் பிரிட்டானிய அரசுக்குச் சொந்தமானது என்றும், இதன் மொத்தப் பரப்பளவு 14,65,322 சதுர மைல்களாகும் என்றும் அண்மையில் பாராளுமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை கூறுகின்றது. [ஏறக்குறைய 15,05,322 சதுர மைல்]. உலகில் மிக உயரிய, கண்ணுக்கினிய, விழுமிய மலைத் தொடர்களுக்கும் தொகுதிகளுக்கும் இடையே பல்வேறு இனங்களைச் சார்ந்தவர்களும் பழங்குடி மக்களும் அடங்கிய இருபது கோடிக்கும் மேற்பட்ட மக்கள் வாழ்ந்து வந்தனர். வெவ்வேறுபட்ட தட்பவெப்ப நிலைகளைக் கொண்டிருந்த அந்தப் பெரும் நிலப்பரப்பு, அளவான குளிர்காலத்தையும் வேனிற்காலத்தையும் பெற்றிருந்தது. அந்த நிலப் பரப்பைச் சுற்றியுள்ள கடற்பரப்பிலிருந்து நீர் ஆவியாகி, மண்ணை வளப்படுத்தும் வான்மழையாக மலைப்பகுதிகளில் பொழிந்து செழிப்பாக்குகிறது. பருவ காலத்தில் கதிரவன் தன் ஆற்றல்மிக்க ஒளிக் கதிர்களால் பயிர்களுக்கு உயிர்ப்பூட்டி உற்பத்தியைப் பெருக்குகிறான். இருப்பினும் இதன் சில பகுதிகளில் குறிப்பாக இராஜபுதனத்தின் எல்லைப் பகுதிகளில் மழை இல்லை; ஆதலின் அவை மழையில்லா மாவட்டங்களாகி அங்கு வாழும் மக்களை அச்சுறுத்தும் மரணத்தின் நிழல்படிந்த பாலை நிலமாகக் காட்சியளிக்கின்றன. இவை அனைத்தையும் ஒருங்கே வைத்து உற்று நோக்கினால், இந்த நாடு மிகச் சிறந்த இயற்கை வளத்தையும் வல்லமையையும் பெற்றுத் திகழ்கிறது எனலாம்.

வடக்கில் உயர்ந்து நிற்கும் மலைத் தொடர்களிலிருந்தும் சமவெளிப் பகுதிகளிலிருந்தும் உருவாகித் தென்மேற்காக ஓடிவரும் சிந்து நதியும் [INDUS ] அதன் கிளை ஆறுகளும், தென்கிழக்கில் ஓடிவரும் கங்கை,

பிரம்மபுத்திரா ஆறுகளும் இணையில்லா ஆறுகளாக விளங்குகின்றன. இவை வேளாண் மைக்கும் நீர்வழிப் போக்குவரத்துக்கும் பெரிதும் பயன்பட்டதோடு, மிக இன்றியமையாதவையாகவும் திகழ்ந்தன. விந்தியாத்ரி, சாகியாத்ரி மலைத் தொடர்களில் உருவாகி ஓடிவரும் துணையாறுகள் மேற்கிலும் தெற்கிலும் பாய்ந்தோடி மக்களின் தொழில், வணிகத் துறைகளை வளப்படுத்துகின்றன. மேலும் ஆங்கில அரசின் கீழ், பணியாற்றத்தக்க, தகுதியுடையவர்களாக அவர்களை அறிவியல் துறையில் வளர்த்தன. அதன் காய்கறி உற்பத்தியானது மக்களின் தேவைக்கும் ஆடம்பர வாழ்வுக்கும் ஏற்ற வகையில் உதவியாக இருந்தது. அது மட்டுமல்லாது இந்த மண்ணின் தொல்குடி மக்களது தேவைக்குமேல் காய்கறி உணவுப் பொருள் உற்பத்தி இருந்தமையால் அவர்கள் புலால் உணவை நாடவேண்டிய தேவை இல்லாமற் போய்விட்டது.

இந்த மண்ணில் அழியாது விளைந்து கொண்டிருந்த சிலவகைத் தாவரங் களிலிருந்து தங்கள் ஆடைகளை அவர்கள் தயாரித்துக் கொண்டார்கள். தங்களின் வீடுகளுக்கு அருகிலேயே வளர்ந்திருந்த ஒருவகை மரத்தின் கிளைகளையும் இலைகளையும் கொண்டு தங்கள் வீடுகளை அமைத்துக் கொண்டார்கள். அவர்களின் உழைப்புக் கருவிகளைச் செய்வதற்கான மூலப் பொருள், அந்த நிலங்களிலேயே விளைந்து கிடந்தன. சில மாவட்டங்களில் பயன்மிக்க கனிமங்களைத் தோண்டி எடுக்கும் பணியிலும் அவர்கள் ஈடுபட்டிருந்தார்கள். குறிப்பாக, இயந்திரங்களுக்குப் பயன்படும் நிலக்கரி முதலான கனிமங்களை அவர்கள் பண்படுத்தப்பட்ட, பண்படுத்தப்படாத நிலங்களிலிருந்து தோண்டி எடுத்தனர். அரசர்கள் [காட்டுவிலங்காண்டிகளைப் போலப்] பேராசை கொண்டவர் களாக முத்துக்களையும் பொன் அணிமணிகளையும் அணிந்திருந்தனர். வைரம், பொன், மாணிக்கம் முதலானவை நாகரிகம் படைத்த இந்த மண்ணில் செல்வர் வீடுகளிலும் அரண்மனைகளிலும் ஒளிவீசி அழகு செய்தன.

தங்களது உற்பத்திப் பொருட்களை அயல்நாட்டுப் பொருட்களோடு பண்ட மாற்றுச் செய்து கொண்டு வெளிநாடுகளுடன் வணிக உறவுகளை வளர்த்துக் கொண்டார்கள். இதனைத் தங்களின் வசதிக்காகவே அவர்கள் செய்து கொண்டார் களேயொழியப் பொருளியல் முட்டுப்பாடுகளுக்காக அல்ல. தொலைதூர நாடுகளிலிருந்து பண்டங்கள் இங்கு கொண்டுவரப்பட்டன. அவற்றைக் கையிருப்பில் மிகையாக வைப்பதற்காக அல்ல; இயற்கைப் பேரழிவு நேரிடும் போது, எல்லைப் புறத்தில் வாழும்

மக்களின் தேவைக்காகப் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டன. இதன் ஆண்டு வருமானத்தில் பிரிட்டானிய அரசுக்கு 300,00000 ஸ்டெர்லிங் இந்தியா செலுத்திக் கொண்டிருந்தது. ஆனால், இந்த நாட்டின் மொத்தப் பொதுக்கடன், அதன் சொத்துக்களைக் கொண்டு உடனடியாக எளிதில் தீர்த்துவிடக் கூடியதாகவே இருந்தது; இதன் ஈராண்டு வருமானத்தைவிட அந்தக் கடன் குறைவாகவே இருந்தது. (1855 – இல் இந்திய அரசின் ஆண்டு வருமானம் 2,91,33,000 ஸ்டெர்லிங்காகவும் இந்த ஆண்டில் அதன் பொதுக் கடன் 5,55,31,120 ஸ்டெர்லிங்காகவும் இருந்தது.) இந்த நாடு ஏற்றுமதி செய்த பொருட்கள் மிக அதிகமானவை; அருமைப்பாடு மிக்கவை; மதிப்பு மிக்கவையாக இருந்தன. உலகின் தொலைதூர நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட இந்தியப் பொருட்களின் வாயிலாக ஏறக்குறைய 11 லட்சம் டன் பொருட்கள் இங்கு இறக்குமதி செய்யப்பட்டன. மேற்கத்திய நாடுகளிலிருந்து பெருமளவு செல்வம் தொடர்ந்து இங்கே வந்து குவிந்து கொண்டிருந்தது. இப்போது அது பரந்த உள்ளம் கொண்ட, நற்செயலாற்றும் விருப்பமுடைய, ஆர்வமும் அக்கறையும் கொண்ட ஓர் அரசாங்கத்தைப் பெற்றிருக்கிறது. இன்னும் அதனைப் பாராட்ட அது கற்றுக் கொள்ளவில்லை. உலகிலேயே அறிவிற் சிறந்த, கொடைக்குணம் கொண்ட நாடு அது என்பதை இவர்கள் இன்னும் சரியானபடி உணர்ந்து கொள்ளவில்லை.

இந்த மாலை வேளையில் நாம் கலந்துரையாடப் போகும் பழங்கால இந்தியா இன்று பெற்றுள்ளதைப் போன்ற பெருமையை – முதன்மையை அன்று பெற்றிருக்கவில்லை. **இண்டஸ்** என்னும் ஆறு பாய்ந்தோடும் நாடு என்ற அளவிலேயே அது அறியப்பட்டிருந்தது. இண்டஸ் என்னும் இந்தச் சொல்லில் இருந்துதான் அது (இந்தியா) என்று தன் பெயரைப் பெற்றது. பின்னர் மேலே நாம் குறிப்பிட்டுள்ள எல்லைகளுக்குட்பட்ட பரந்த நிலப்பரப்பிற்கு அந்தப் பெயர் வழங்கி வருவதாயிற்று. இது முதன்மையாக **பஞ்ச நாடா** , கிரேக்கர்களின் **பெண்டிபொடாமியா** அல்லது பிற்காலத்தில் வழங்கப் பெற்றதைப் போல அய்ந்து ஆறுகள் பாயும் நிலமான பஞ்சாப் என்று பெயர் பெற்றது. இண்டஸ் ஆற்றின் கிளையாறுகள் பாய்கின்ற மாவட்டங்களை உள்ளடக்கியதாக அது இருந்தது. தொன்மைச் சமஸ்கிருதத்தில் அது சிந்து அல்லது சிந்தஸ் என்று பெயரிடப்பட்டது. இதற்கு இண்டஸ், என்ற சொல்லே ஒப்பானதாகும். (நிகரானது). உஸ் என்னும் ஒலிப்புடைய அந்த எழுத்து h என்று உருமாற்றம் பெற்றுவிட்டது. கிரேக்கர்களைப் போல இங்கு வாழ்ந்த மக்களும் மிக எளிதில் அந்த உருமாற்றத்தைச் செய்தார்கள். நாம் மிகக் கவனமாகத் துல்லியமான –

சரியான உச்சரிப்புடன் அதனைக் கையாள வேண்டும். இண்டஸ் நதி பாய்ந்தோடிய நிலப்பரப்பே [அது மட்டுமே] ஆதி இந்தியாவாகும். இப்போது இந்தியாவை விட்டுவிட்டு சிந்து அல்லது பஞ்சாப்பைப் பற்றிப் பேசுவது என்றால், அது பிரிட்டனின் வடபகுதியிலுள்ள நார்தம்பிரியப் பகுதியைச் சேர்ந்த ஒருவர், பழைய ஆங்கிலியா மாவட்டங்களுக்குச் செல்லும்போது நான் இங்கிலாந்தை விட்டு வெளியேறிவிட்டேன் என்று கூறும் முட்டாள்தனத்திற்கு ஒப்பானதாகும்.

பழங்கால இந்தியா, தற்கால இந்தியா உள்ளடக்கியிருக்கும் எல்லைப் பரப்பில் அல்லது வாய்ப்பு வளங்களில் இருபதில் ஒரு பகுதியைக் கூடப் பெற்றிருக்க வில்லை. இக்கண்டத்தில் வாழ்ந்த மக்களுக்கு இதன் பெருமைமிக்க செல்வச் செழிப்பைப் பற்றித் தெரியவில்லை. அவர்களின் பின் சந்ததியினர் பிற்காலத்தில் இக்கண்டத்தை விரிவுபடுத்துவதற்காகத் திட்டமிட்டு அவர்கள் பெறப்போகும் வெற்றிகளைப்பற்றி அவர்களுக்கு ஏதும் தெரியாது. தங்கள் இனத்தவரின் திறமையும் ஆற்றலும் எந்தத் துறையில் வளரப் போகின்றன என்பதும் அவர்களுக்குத் தெரியாது. தொன்மைமிக்க இந்த நிலத்தில் அவர்களுக்கு முன்னரே வாழ்ந்து கொண்டிருந்த தொல்குடி மக்களை [இந்த மண்ணின் மைந்தர்களை] எவ்வாறு முன்னேற்றுவது அல்லது அவர்களை எவ்வாறு அடக்கி ஒடுக்கித் தாழ்நிலையில் வைத்திருப்பது என்பதில் தங்களின் பின் சந்ததியினர் தங்கள் திறமையைப் பயன்படுத்த எடுத்துக் கொள்ளும் முயற்சிகளையும் அவர்கள் அறியவில்லை; மனிதக் குடும்பத்தின் மூலவர்களாகிய அப்பழங்குடி மக்கள், இயற்கையின் வியப்பிற்குரிய வளங்களைத் தெரிந்து கொள்ளவும் அந்த நல்வாய்ப்பினைப் பயன்படுத்தி அந்த இயற்கை வளங்களைச் சுவைக்கவும் அவர்கள் அறிந்திருந்தார்கள். அந்த இயற்கை வளங்கள் இன்றும் நம்மைச் சூழ்ந்து நின்று களிப்பூட்டுகின்றன.

இந்தியக் கண்டத்தைப் பற்றிய, புவியியல் விளக்கங்களோடு கூடிய இந்த முன்னுரை போதுமானதாகும். அடுத்து, காலவரிசைப்படியும் இனப்பரப்பு வகையிலும் சிறியதொரு விளக்கத்தைக் காணலாம். இந்தச் சொற்பொழிவுக்கு, மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா அல்லது, வேதகாலத்து ஆரியர் களின், இண்டஸ் நதிக்கரையில் அவர்களது சமூக வாழ்க்கை நிலை என்று நாம் தலைப்பிட்டிருக்கிறோம். ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பின் இவ்வாறு நாம் செய்திருக் கிறோம். அதனால் நாம் இலக்கியச் சான்றாவணமாக மாற்றியிருக்கிறோம். முறையாக அமைந்திராத பண்படுத்தப்படாத பழங்கதைத் தொகுதிகளைக் கொண்ட தொன்மை

வாய்ந்த இந்திய – சிங்களப் படைப்புகளைக் [இலக்கியங் களைக்] கொண்ட தொகுதிகளின் இடையே, ஒன்றிரண்டு காலப் பகுதிகளைத் துல்லியமாக வரையறை செய்திருக்கிறோம். இவற்றில் மிக முக்கியமானது கி.மு.544 அல்லது 543 ஆம் ஆண்டில் புத்தவியலைத் தோற்றுவித்த சாக்கிய முனியின் மரணமாகும். புத்தவியல் என்பது எதற்கும் அஞ்சாத யூகங்களைக் கொண்ட ஒரு முறையாகும். அது உயிர் வாழ்வனவற்றையும், தொடர்ந்து ஏற்படும் மாற்றங்களையும் இயற்கையின் மேலும், வளர்நிலைப் போக்கின் மேலும் ஏற்றிச் சொல்லும் முறையாகும். அது எல்லாம் வல்ல, எல்லாம் அறிந்த படைப்பாளனைப் பற்றி அல்லது நீடித்து நிலைத்திருக்கும் கடவுளைப் பற்றி எவ்விதக் குறிப்பும் இல்லாமல் பேசுவதாகும். மேலும் அது தனி மாதிரியான அவனுடைய ஆன்மவியல் அழிவில்தான் மனிதனின் மிகச் சிறந்த நற்பண்புகளை உணரமுடியும் என்பதை எடுத்துக் காட்டுகிறது. இந்தச் சிந்தனை சார்ந்த மனப்போக்கு முழுமையான வளர்ச்சியடையாத அல்லது அமைப்பாக [நிறுவன மாக] உருவாகாத இக்கருத்தியல் பிறருடைய எழுத்துக்களிலும் காணப்படுகிறது. **குறிப்பாகச் சாங்கியத் தத்துவத்தைத் தோற்றுவித்தவரான கபிலமுனியின் எழுத்துக்களிலும் இக்கருத்தியல் நிலவுகிறது. சாங்கியம், இந்தியத் தத்துவ முறைகளில் ஒன்றாகும். இது புத்தவியலுக்கு முன்பு தோன்றியதாகும்;** தொன்மைசான்ற சாங்கிய புத்தவியல் நூல்களும், காலத்தால் இவற்றிற்கு முற்பட்டவையாகக் கருதப்படும் வேறு இரண்டு தத்துவங்களும் இவற்றிற்கு முன்பாகவே இசைப்பாடல் வடிவிலான இலக்கியம் இருந்தமையை ஒப்புக் கொள்கின்றன. அவை வேதங்கள் என்று அழைக்கப் படுகின்றன.

இந்தத் தத்துவத் துறைகளில் ஒன்றான – குறிப்பாகச் சொல்ல வேண்டு மென்றால் பூர்வமீமான்சா [அல்லது பழைய மீமான்சா] என்பது வேதங்களைப் பற்றி, பழமை வாத விளக்கங்களைத் தருவதற்கு முற்படுகின்றது. இதன்மூலமாக இவற்றைத் தொன்மை வாய்ந்த உயரதிகாரப் படைப்புக்களாக அது ஏற்றுக் கொள்கிறது. மீமான்சாவுக்குப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்த உத்தர மீமான்சா [அல்லது பிந்தைய மீமான்சா] அல்லது வேதாந்தா என்பது அவர்களின் முடிந்த முடிபான தெய்வீக ஆற்றலின் பல்வேறு வடிவங்களை நிலைநிறுத்துவதற்கு முற்படுகின்றது. அஃதொன்றே உயர்ந்தது என்று இவை குறிப்பிடுகின்றன.

வேதங்கள் தோன்றிய காலத்திலிருந்து ஊகக் [கற்பனைக்] கருத்துக்களில் ஏற்பட்ட முன்னேற்றத்தை இது காட்டுவதாக அமைந்துள்ளது. இந்தத் தத்துவத் துறைகள், உரைநடையில் எழுதப்பட்ட

பிரமாணங்களைப்பற்றிக் குறிப்பிடு கின்றன. பிரமாணங்கள் வேதங்களோடு தொடர்புடையவை; ஆனால் இவற்றின் நடை, சொல்லாட்சி, வேதங்களின் பாட்டடிகளை எடுத்தாள்கின்ற தன்மை ஆகியவற்றை வைத்து நோக்கும்போது இவை இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகள் வேதங்களுக்குப் பிற்பட்ட காலப் பகுதிகளில் வழங்கிவந்த பல்வேறுபட்ட பாடல் துணுக்குகளின் தொகுப்பே என்பது தெளிவாகிறது. இவை உருவாக்கப்பட்ட காலத்திற்கும் தொகுப்புக்களாக வடிவமைக்கப்பட்ட காலத் திற்கும் பெரும் இடைவெளி இருந்திருக்க வேண்டும்; அதன் பின்னரே பல்வேறு கோட்பாடுகளின் அடிப்படையில் அவை வடிவமைக்கப்பட்டன. அவை சம்கிதாஸ் எனப்பட்டன.

வேதம் என்ற சொல்லுக்கு அறிவின் ஊற்று என்று பொருள் கொள்ளலாம். இதனுடைய சமஸ்கிருத மூலச் சொல் விட் (Vid ) அல்லது வித் (Vidh ) என்பதாகும். கிரேக்க மொழியில் விதா (Vidha ), (Vida ) என்றும் லத்தீன் மொழியில் விடோ (Vido ), விடியோ (Video ) எனவும், ஆங்கிலத்தில் விட் (Wit ) எனவும், வேதம் என்ற சொல்லின் மூலங்கள் காணக் கிடக்கின்றன. நான்கு வேதங்களிலும் ரிக் வேதமே மிகவும் தொன்மை சான்றதாகும். ரிக் வேதம் 11,000 ரிக்குகள் அல்லது ஈரடிச் செய்யுள்களைக் கொண்டதாகும்.

ரிக் என்பதிலிருந்தே ரிக் வேதம் எனும் பெயர் இதற்கு ஏற்பட்டது. இவற்றின் ஆசிரியர்களுக்கேற்ப இசைப்பாடல் வடிவில் இவை அமைக்கப்பட்டன. தத்தம் கடவுளரை எழுப்புவதற்காக இவை இவ்வாறு அமைக்கப்பட்டன. **யஜுர் வேதாவின் கண்ணிகள் யாஜசனேயா என்று அழைக்கப்படுகின்றன. இவற்றில் பாதிக்கு மேற்பட்ட பாடற் கண்ணிகள் ரிக் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டவை யாகும். ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ள கருத்துக்களையே இவை கூறுகின்றன. யஜுர் வேதத்தின் பாதி அளவுள்ள சாம வேதம், ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ள செய்திகளை அப்படியே வழிமொழிகின்றது. உயிர்ப்பலி கொடுப்பதற்குரிய பாடல்களை சாம வேதம் வரிசைப்படுத்திக் கூறுகின்றது. அதர்வண வேதம் காலத்தால் மேற்கூறிய மூன்று வேதங் களுக்கும் பிற்பட்டது. சாம வேதப் பாடல்களும் எதிரிகளை அழிப்பதைப் பற்றியே பேசுகின்றன. அதர்வண வேதமும் ரிக் வேதக் கருத்துக்களை அப்படியே வழிமொழிகின்றது.**

இவை இவ்வாறு அமைந்திருக்க ஒரு நேர்மையான திறனாய்வின் வழி நாம் இவற்றின் காலத்தைக் கணக்கிட்டால் இவை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவையாக அதாவது ஏசு பிறப்பதற்கு முன்பு

கி.மு.பதினைந்து அல்லது பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முற்பட்டவையாக இருக்கலாம் என்ற முடிவிற்கு நாம் வரலாம். இந்திய வரலாற்றில் இந்தக் காலப் பகுதிதான் மிகுந்த சுவையுடையதாகும். இக்காலப் பகுதியில்தான் இந்தியாவில் உருவான நிறுவனங்களின் கருமூலத்தை ஊற்றுக் கண்ணினைத் தோற்றுவாய்தனை நாம் காண்கிறோம். இந்தியாவோடு தொடர்பு இருந்தபோதிலும் மேலை நாடுகளிலும் கீழை நாடுகளிலும் வாழ்ந்த மக்களுக்கு இதனைப் பற்றி நீண்டகாலம் முழுமை யாகத் தெரியவில்லை.

வேதங்களை ஓதிக் கொண்டிருந்தாலும் பாடிக் கொண்டிருந்தாலும், இந்தியர் களுக்கு, இன்றுவரை அவர்களுக்கு உரிமை படைத்த வழிபாடுகளில் அவர்கள் இவ்வாறு ஓதிவந்த போதிலும், அவர்கள் தங்களின் முன்னோர்களைப் பற்றியோ தங்கள் தாய்நாட்டைப் பற்றியோ தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அறிவு அவர்களுக்கு இல்லை. மேலும் அவர்கள் போற்றி வணங்கிய புனிதமான வேதங்களோடு ஒத்துப்போக வேண்டிய தொன்றுதொட்டுவந்த மனத் தடுமாற்றமும், பிற்காலத்து எழுந்த சாத்திரங்களின் வல்லாண்மை அதிகார மிரட்டலும் அவர்களைப் பணிய வைத்ததோடன்றி, அவர்களின் கடவுளாகிய பிரம்மாவின் நான்கு வாயில்களிலிருந்தும் (முகம், தோள், தொடை, கால்) அவர்கள் எல்லோரும் பிறந்ததாக அவர்கள் கருதினார்கள். மேலைநாட்டு அறிஞர்கள், இவற்றை அறிந்து ஆராய வேண்டும் என்னும் அறிவுக் கூர்மையோடு வரும்வரை இத்தகைய பழமைக் கருத்துக்களை அவர்கள் தங்களுடனேயே வைத்திருந்தார்கள். அய்ரோப்பியப் பொற்காசுகளும் அவர்களின் விடாப்பிடியான வற்புறுத்தல்களும், நம்முடைய காலத்திலேயே, வேதங்களை அய்ரோப்பியரின் உடைமைகளாக்கிவிட்டன.

(ரிக் வேதத்தின் முதன்மைப்படி ஒன்று பல ஆண்டுகளாக என்னிடம் இருந்தது. பம்பாய் ஆட்சித்துறை உயர் அதிகாரியாக இருந்த ஜெ.எஸ்.லா என்பவருக்காக அதை நான் பெற்றுக் கொண்டுவந்தேன். **அது கிறித்துவத்தின் வெற்றி நினைவுப் பரிசாகக் கிறித்துவ மதத்திற்கு மாறிய ஒரு பார்ப்பனரால் சமர்ப்பிக்கப்பட்ட தாகும்).**

அய்ரோப்பியக் கல்வியும் அய்ரோப்பிய அறிவுடைமையும், இந்தியாவிலிருந் தவர்களின் உதவியும் அவர்களின் முன்னோர் எழுதி வைத்திருந்த குறிப்புக்களும் வேதங்களைப் பற்றிய விளக்கங்களுக்குக் காப்பிடமாக அமைந்துவிட்டன. பிரிட்டன், பிரெஞ்சு, ஜெர்மன், அமெரிக்கா ஆகிய நாடுகளைச் சேர்ந்த அறிஞர்கள் இப்போது வேதங்களை

வெளியிடுவதிலும் மொழிபெயர்ப்பதிலும் ஈடுபட்டுள்ள னர். **கிழக்கிந்திய கம்பெனி இவர்களுக்கு அனைத்து உதவிகளையும் செய்து வருவதோடு இவற்றை உலகுக்கு வெளிப்படுத்திக் காட்டும் பணியையும் அது செய்து வருகின்றது.**

ரிக் வேதத்தின் மூன்று தொகுதிகள் திறனாய்வுக் குறிப்புகளுடன், சாயன ஆச்சாரியா எழுதிய விளக்க உரையுடன் சமஸ்கிருதத்தில், கிழக்கிந்திய கம்பெனியால் வெளியிடப்பட்டுள்ளது. ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் மாக்சு முல்லர் இதனை வெளியிடுவதற்காகப் பத்து ஆண்டுகள் கடுமையாக உழைத்திருக்கிறார். இதனையடுத்துப் பேராசிரியர் வில்சன் [எனும் ஆங்கிலேயர்] ரிக் வேதத்தின் மூலத்தை அப்படியே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

**[வேதங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதற்கும் அவற்றை வெளி யிடுவதற்கும் பரப்புவதற்கும் பார்ப்பனர்க்கு ஆங்கில அரசின் கிழக்கிந்திய கம்பெனி பெருமளவில் நிதி உதவி செய்துள்ளது என்பதை இங்கு நாம் நினைவிற் கொள்ள வேண்டும்** . மொழிபெயர்ப்பு ஆசிரியர்]

வேத நூல்களைத் திறந்து பார்க்கும்போது, அவை யாரைப் பற்றிப் பேசுகின்றன, யாருடைய மதச் செயல்களைப் பற்றிப் பேசுகின்றன என்றால், அவை ஆரியர்களைப் பற்றிப் பேசுகின்றன. **வேதங்களுக்கு உரையெழுதிய பார்ப்பன உரையாசிரியர்களும், இவர்களைத் தொடர்ந்து எழுந்த இலக்கியப் படைப்புக்களும் ஆரியர் என்னும் இந்தச் சொல்லுக்கு மதிப்பிற்கு உரிய மனிதர்கள் என்று பொருள் கூறுகின்றனர்.**

எனினும், ஆரியர் என்ற சொற்பெயர் ஒரு பட்டப்பெயர் அல்ல என்றும் அது ஆரியர்களின் மூதாதையர் வழிவந்த ஆரியர் இனத்தைக் குறிக்கும் சொல் என்றும் வேதங்கள் தெளிவாக நிறுவுகின்றன. ரிக் வேதத்தில் பல இடங்களில் ஆரியா என்ற சொல் மதிப்பிற்குரிய, மிக உயர்ந்த, மேலான என்ற பொருளிலேயே பயன்படுத்தப் பட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். கீழ்த்திசை மொழிப் புலமையாளர்கள் இதனை பார்சி மொழியில் வழங்கும் அய்ரியா என்பதற்கு இணையானதாக ஒப்புக் கொள்வர். வேண்டிடாட் எனுமிடத்திலும் வேறுசில பகுதிகளிலும் வழங்கி வந்த தூய அய்ரியா, கிரேக்கர்களின் ஆரியானா, ஈரானின் கிழக்குப் பகுதியில் பிற்காலத்தில் வழங்கிவந்த ஆரியானா ஆகியவை இங்கே குறிப்பிடத் தக்கவையாகும். [யாட்ஸ் போன்ற பொது வழிபாட்டு முறை வாசகச் சுவடிகளில் உள்ளதைப் போன்று, அண்டை நாடான தூரான்

அல்லது தூய்ரியா என்பதனுடன் இது மிக நெருக்கமாக இணைக்கப் பட்டிருக்கிறது] பெகிஸ்டன் பட்டயத் தகடுகளில் உள்ள மறைபொருளைக் கண்டறிந்து, சர்.ராலின்சன், பேரா. வெஸ்டர்கார்ட், திரு.நாரிஸ் ஆகியோர் மொழிபெயர்த்து வெளிப்படுத்தி யுள்ளமையைப் போன்று இவற்றை விளக்க வேண்டும். முடிவாக, வேதங்களின் தாயகத்திற்கு ஆரியா என்ற சொல்லின் முடிந்த முழு நீட்சியே பெயராக அமைந்துவிட்டது. சொராஸ்டிரியர்களின் தூய அல்லது மூலவடிவ அய்ரியா இதனின்றும் தனித்தன்மை வாய்ந்ததாகக் கருதப்பட்டது. ஈரானின் பழங்குடி மக்கள் சொராஸ்டிரியப் பகுதியிலிருந்து சிதறுண்டு போயினர்.

வேதகாலத்தில் ஆரியர்கள், நாகரிக முதிர்ச்சியற்ற அவர்களது நாட்டில் இருக்கவில்லை என்பது பல்வேறு ஆய்வுகளின் மூலமாகத் தெளிவாகின்றது என்று நான் கருதுகின்றேன். பனிக் காலங்களை வைத்து ஆரியர்கள் அவர்களது ஆண்டுகளைக் கணக்கிட்டுக் கொண்டனர். பனிக்காலம் ஒரு நாட்டில் குறிக்கப் படுவதைக் கொண்டு ஆரியர்கள் காலத்தைக் கணக்கிட்டனர். வடக்கில் வாழ்ந்த பழங்குடி மக்களைப் போல ஆரியர்கள் குதிரைகளை உயிர்ப்பலி கொடுத்து வேள்வி செய்வதில் [அசுவமேத யாகம்] அதிக ஆர்வமும் அக்கறையும் காட்டினர். ஆரியர்கள், அவர்களைச் சுற்றி வாழ்ந்தவர்களைக் காட்டிலும் வெண்ணிற மாகவும் அழகாகவும் இருந்தனர். **அவர்கள் அக்காலத்தில் வந்தேறிய எல்லைப் பகுதிகளில் முழுமையாக அமைதியை நாடுகிற வகையில் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவில்லை.** இங்கே நான் குறிப்பிடுகின்ற உண்மைச் செய்திகள் யாவும், ரிக் வேதத்தை மிகுந்த எச்சரிக்கையுடன் மொழி பெயர்த்த அறிஞரான பேராசிரியர் எச்.எச். வில்சன் அவர்களின் கருத்துக்களால் உறுதி செய்யப் பட்டுள்ளன. அவர்கள் [தொல்பழங்காலத்து இந்தியர்கள்] வடக்கத்திய இனமரபு வழியில் வந்தவர்கள் என்பது அவர்களின் பேச்சு முறை யினால், கருத்து வெளிப்பாட்டு முறையினால் உறுதியாகின்றது. அவர்கள் வழிபாடு நடத்தும் போது, நீண்ட நாள் வாழ வேண்டுவதும், நூறு பனிக் காலங் களைக் காண அருள்புரிய வேண்டுமெனக் கேட்பதும் வெப்பம் மிகுந்த நிலப்பரப்பில் வாழும் மக்களின் விருப்பமாக இருக்க முடியாது. ஆரியர்கள் அழகு மிகுந்த தோற்றமுடையவர்கள்; இந்தியாவை முற்றுகையிட்ட வெளிநாட்டவர் களில் இவர்கள் கவர்ச்சி மிகுந்த தோற்றம் கொண்டவர்களாக விளங்கினர்.

மழைக் கடவுளான இந்திரன், இந்த நிலத்தின் தொல்குடி மக்களை, நாகரிக மற்ற காட்டுவிலங்காண்டிகளை அழித்துவிட்டு வளம் நிறைந்த

வயல்வெளி களையெல்லாம் வெண்ணிறமும் அழகிய தோற்றமும் கொண்ட தன் நண்பர் களுக்குப் பகிர்ந்து கொடுத்தான் என்று சொல்லப்படுகிறது. இவ்வாறு அழிக்கப் பட்ட மக்களை தஸ்யூக்கள் என்று குறிப்பதனால் நமக்குச் சில அய்யப்பாடுகள் எழுகின்றன. தஸ்யூ என்னும் சொல்லாட்சி அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும் தஸ்யூக்கள் என்றழைக்கப்படும் இவர்கள், மதச் சடங்குகளைச் செய்யாத வர்கள், அத்துடன் இவர்கள் மதச் சடங்குகள் செய்வோரை அவ்விடத்தினின்றும் விரட்டியிருக்கிறார்கள் என்று மீண்டும் மீண்டும் குறிப்பிடப் படுகின்றது. **[ரிக் வேதத்தின் பல இடங்களில் இவ்வாறு கூறப்படுகின்றது. தொன்மைத் திராவிடர்கள் மதச் சடங்குகளுக்கு எதிரானவர்கள் எனும் வரலாற்றுண்மை இதனால் புலனாகின்றது** மொழிபெயர்ப்பு ஆசிரியர்]

தஸ்யூக்கள் என்று இங்கே குறிப்பிடப்படுவோர், பார்சி [மொழி]யில் உள்ள புனித நூல்களில் குறிக்கப்பட்டுள்ள டாக்யூஸ் எனும் இனத்தவரே என்பதில் அய்யமில்லை. பெகிஸ்டன் பட்டயங்களில் டாகியாஸ் என்று கூறப்படுபவர்களும் இவர்களே. இதற்கு நாடுகள் என்றும், மாநிலங்கள் என்றும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இவர்கள், யூதரல்லாத கோயிம், அல்லது ஜென்டைல்ஸ் [யூதருக்குப் புறம்பானவர்கள்] என்னும் உயர்நிலையிலிருந்த மக்கள் என்று கருதுவதற்கு இடம் இருக்கிறது. சுருங்கச் சொன்னால் இவர்கள் காட்டு விலங்காண்டிகளல்லர். தனிச்சிறப்பு வாய்ந்த நகரங்களையும் நிறுவனங்களையும் இவர்கள் அமைத்துக் கொண்டு நாகரிகமான வாழ்க்கை நடத்தி வந்தனர். இதன் பின்னர் ஆரியர்கள் பல்வேறு தட்ப வெப்பம் உடைய நிலப்பரப்பைக் கடந்து தங்கள் வாழ்விடங்களை அமைத்துக் கொண்டனர். எனினும் அங்கு வாழ்ந்த மக்கள், அவர்களுக்கு வலிமை வாய்ந்த எதிரிகளாகவே தென்பட்டனர்.

இவ்வாறு இப்பெரு நிலப்பரப்பின் தொல்குடி மக்களாகிய திராவிடர்களை ஆரியர்கள் தஸ்யூக்கள் [தாசர்கள் - அடிமைகள்] என்றும், அரக்கர்கள் என்றும், உக்கிரர் என்றும் பெயரிட்டு இழிவுபடுத்தினர். இவர்கள் அனைவரையும் சூத்திரர் என்ற பொதுத் தலைப்பின்கீழ் ஆரிய நூல்கள் கொண்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் உக்கிரர் என்பவர் சத்திரிய ஆணுக்கும் சூத்திரப் பெண்ணுக்கும் பிறந்தவர் என்று மனுதருமம் விளக்கம் தருகிறது. ரிக் வேதத்தில் வரும் ஒரு சொல்லுக்கு மனுதரும சாத்திரம் விளக்கம் கொடுக்கிறது. இதனால் ஆரியரின் நூல்கள் அனைத்தும் ஒன்றோடொன்று நெருங்கிய உறவு கொண்டவை என்பது தெளிவாகும்.

மேலும் உக்கிரன் எனும் சூத்திரப் பட்டத்தை ஆரியர்கள் தமிழ் மன்னர் களுக்குச் சூட்டியிருக்கிறார்கள். பாண்டிய மன்னன் ஒருவன் உக்கிரப் பெருவழுதி என்ற பெயரைத் தாங்கியிருக்கிறான். [புறநானூறு - -21, 367]. **சூத்திரப் பெருவழுதி என்பதை அவன் பெருமைக்குரிய பட்டம் என்று கருதியிருக்கிறான்.**

**ஆரியர்கள் நேருக்கு நேர் மோதுகின்ற போர் மரபை எப்போதும் கடைப்பிடிக்க மாட்டார்கள். மரத்தின் பின்புறத்தே மறைந்து நின்று இராமன் வாலியைக் கொன்றதைப் போல, ஆரியர்கள் மறைந்து நின்றே எதிரிகளை அழிப்பவர்கள். அவ்வகையில் தங்களின் எதிரிகளுடைய ஆயுதக் கிடங்கு களுக்கு நெருப்பிட்டுப் போர்க்கருவிகளை அழித்திருக்கிறார்கள். இதனை மழைக் கடவுளான இந்திரனே செய்தான் என்று எழுதி வைத்தார்கள். நாளந்தா பல்கலைக் கழகத்தை ஆரியர்கள் நெருப்பிட்டு அழித்ததையும் நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.** மொழிபெயர்ப்பு ஆசிரியர்]

வேதங்களின் முன்பகுதிகள் தொகுக்கப்பட்ட காலத்தில், நாம் ஏற்கனவே குறிப்பிட்டுக் காட்டியதைப் போல ஆரியர்கள் இண்டஸ் ஆற்றின் கிளையாறு களின் கரைகளிலும், இப்போது பஞ்சாப் என்று பெயரிடப்பட்டுள்ள மாநிலத்திலும் குடியேறிவிட்டார்கள். வேதங்களுக்கு உரையெழுதிய பார்ப்பனரான சாயன ஆச்சார்யா கிறித்துவுக்குப் பின்பு பதினான்காம் நூற்றாண்டில் வளம் கொழிக்க வாழ்ந்தவர்; **வேதங்களில் குறிப்பிடப்படும் ஆறுகள், தற்கால இந்தியாவை வளப்படுத்திக் கொண்டிருக்கும் பேராறுகள் என்று சாயனர் உரை எழுதியுள்ளார். ஆனால், வேதங்களில் உள்ள மூலப் பாடல்களில், சாயன ஆச்சார்யாவின் கருத்துக்கு எந்தச் சான்றாதாரமும் இல்லை!** வேதங்களில் கூறப்படும் ஆறுகள் அனைத்தும், சுக்தா எனப்படும் வேத இசைப் பாடல்களை எழுதியவர்களின் கண்முன் தோன்றியவை போலக் காட்டப்படுகின்றன. இந்த இசைப் பாடல்களில் இருந்துதான் ரிக் வேதம் தொகுக்கப்பட்டது. இந்திரனே! நீ பசு மாடுகளைக் காப்பாற்றி ஓட்டிவந்தாய்; சோம பானத்தை வெற்றி கொண்டவன் நீ! ஏழு ஆறுகளைக் கட்டவிழ்த்துவிட்டுப் பாய்ந்தோடுமாறு செய்தாய்! பேராசை பிடித்தவனைப் போல ஒரு பருந்துப் பாய்ச்சலில் 99 நீரோடைகளைக் கடந்து நீ வந்திருக்கிறாய்! இந்த அற்புத வேலைகளில் அவன் [இந்திரன்] புகழ் வாய்ந்தவன். அந்த நான்கு ஆறுகளையும் அவன் இனிமையான நீரால் நிரப்புகிறான்; இந்தப் பூமியின் மேற்பரப்பில் பாய்ந்து பரவி ஓடுமாறு செய்கிறான். பலியிடப்பட்ட உணவுப் பொருள்கள் அனைத்தும் அக்னியில் பதப்படுத்தப் படுகின்றன. ஏழு பெரிய ஆறுகளும்

ஒன்றிணைந்து கடலில் கலக்கின்றன. பஞ்சாப்பில் தெற்கிலிருந்து அல்லது வடக்கிலிருந்து நாம் கடந்து சென்றால், நான்கு, அய்ந்து அல்லது ஏழு அல்லது இவற்றிற்கு அதிகமான ஆறுகளைப் பார்க்க முடியும்.

பார்சிகளின் வெண்டிடாட்டில் இந்த மாவட்டம் ஃகப்த ஃகெண்டு (Hapra Hendu ) என்று பெயரிட்டழைக்கப்படுகிறது. இதற்கு ஏழு இண்டீஸ் என்று பொருள். ஃகெண்டு எனும் சொல் சிந்து எனும் சொல்லில் இருந்து தோன்றியதாகும். சிந்து என்பது இண்டஸ் என்பதற்கான சமஸ்கிருதப் பெயராகும். (அதாவது இண்டஸ் என்பதற்கு சமஸ்கிருதத்தில் சிந்து என்று பெயர்.) வேதத்தில் குறிப்பிட்டுக் கூறப்பட்டிருக்கும் இண்டஸ் ஆற்றின் கரைகளில்தான், வேத இசைப் பாடல்களை உருவாக்கியவர்களில் சிலர் வாழ்ந்திருக்கிறார்கள் என்பது உண்மை. இவ்வாறு, எங்களுடைய பரந்த வயல்வெளிகளை நீரால் நிரப்பி வளப்படுத்தி எங்களுக்குப் பெருஞ்செல்வத்தைக் கொடுக்கும் புகழ்பெற்ற சிந்து நதியே! நாங்கள் சொல்வதைக் கேட்பாயாக என்று கூறப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

சிந்து நதிக் கரையில் வாழும் அரசனாகிய பாவ்யாவின் புகழை மனம் விரும்பி நான் மறுபடியும் கூறுகிறேன். ரிக் வேதத்தின் பாடல் ஒன்றில், வேதங்களை வழிபடுவோருடன் தொடர்புபடுத்தி – இணைத்து மூன்று ஆறுகள் இவ்வாறு குறிக்கப்படுகின்றன:– மனுவின் வழிவந்தோர் குடியிருப்பதற்கு இடமாகக் கொண்டுள்ள, திரிசாத்வதி, அபாயா, சரஸ்வதி ஆகிய ஆறுகளின் கரைகளை ஓ! அக்னியே! புகழ்மிக ஒளியூட்டு! இந்த ஆறுகள் தென்மேற்குப் பகுதியைச் சேர்ந்தவை; தென்கிழக்குப் பகுதிக்கும் இவற்றிற்கும் தொடர்பில்லை. இந்திய ஆறுகளின் அமைப்பின்படி இதுவே சரியானது என்பது எனது கருத்தாகும்.

இவற்றில் இரண்டு ஆறுகள் மனுவால் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப்படு கின்றன. புனித ஆறுகளாகிய சரசுவதி, திரிசாத்வதி ஆகியவற்றிற்கிடையே கடவுளர்களால் அமைக்கப்பட்ட நாட்டிற்கு பிரமவர்த்தா என்று பெயர். பேராசிரியர் வில்சன், தம்முடைய விஷ்ணு புராணம் என்னும் நூலில் சரஸ்வதியை, தானேசுவரத்திற்கு (ஸ்தானேஷ்வர்) வடமேற்கில் ஓடுகிற சர்சூடி (sursuri ) என்று குறிப்பிடுகிறார். வேதங்களில் இந்த ஆறு குறிப்பிடப்படுகின்ற முறையை நோக்கும்போது, இது ஆரியர்களின் தனிப் பாசத்திற்குரிய ஆறாக விளங்கியிருக் கிறது என்பது தெரிகின்றது. மேலும், வேர்ச்சொல் ஆய்வின்படி இது ஏரி என்று பொருள்படுகிறது. மணலால் மூடப் பெற்று, தன்னை இழந்து கொண்டிருந்த இந்த ஆறு, அய்ரியாவின் மூலப்பகுதியிலிருந்த அரகுவாய்டி என்பதனுடன் ஒப்புமை உடையதாக

இருந்தது. (பர்னூஃப் எனும் ஆய்வாளர் சரஸ்வதி என்பதற்கும் அரசுவாய்டி என்பதற்கும் இடையிலுள்ள ஒற்றுமைகளை விரிவாக ஆராய்ந் துள்ளார். அரகுவாய்டி என்பதிலிருந்து கிரேக்கர்களின் அரக்கோட்டியா என்ற மாவட்டம் தோன்றியது என்கிறார் பர்னூஃப்.) திரிசாத்வதி ஆறு, சரஸ்வதி ஆற்றுக்கு அருகிலேயே ஓடியதாகக் கூறப்படுகிறது. மகாபாரதத்தில் குறிப்பிடப் படுகின்ற விபாபா, திரிசாத்வதி விபாசா ஆகியவற்றில் ஒன்றான விபாபா என்பதுதான் அபாயாவாக இருக்கலாம். ஆனால், இது எதுவென்று அடையாளம் காணப்பட்டதா என்று எனக்குத் தெரியவில்லை.

ரிக் வேதத்தின் வேறு சில பாடல்களில், மகாபாரதத்தில் குறிப்பிடப்படுகின்ற விபாஷா என்னும் ஆற்றுக்கு இணையாக – வேர்ச்சொல் ஆய்வின்படியும் வேதத்திற்கு உரையெழுதிய பார்ப்பன உரையாசிரியர் கருத்துப்படியும் ஒப்பான தாகக் கூறப்படுகின்ற விபாத், தற்போதைய பியாஸ் ஆற்றின் தோற்றமும், கிரேக்கர்களின் அய்பாசிஸ் அல்லது பாபாசிஸ், சுடுட்ரி – பிற்காலத்தில் சுடுட்ரி அல்லது சட்லெஜ் ஆகிய ஆறுகள் விசுவாமித்திர முனிவருடன் உரையாடல் நடத்திக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகின்றது. விசுவாமித்திரர் வேதங்களில் பல பாடல்களை இயற்றியவர். விபாஷி, விதாஸ்தாவின் அருகில் வாழ்ந்தவர்கள், அய்டாஸ்பெஸ் அல்லது ஜீலம், சரயு (இது அயோத்திக்கு அருகில் இருந்ததா இல்லையா என்பது உறுதியாகவில்லை). இவை அனைத்தும் வாம் தேவாவின் இசைப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனால் பஞ்சாப்பும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளும் இந்திய ஆரியர்களின் மூலக் குடியிருப்பிடங்களாக அமைந்திருந்தன என்று தெரிய வருகின்றது. தென்கிழக்கு ஆறுகளின் அமைப்பு, ரிக் வேதத்தின் இன்றியமையாத பகுதிகளில் பேசப்படுகிறது. ரிக் வேதத்தின் நான்காம் அஷ்டகா (பிரிவு)வில் அத்ரியின் மரபு வழியைச் சேர்ந்த சாயவஷ்வா என்பவரால் முதன்முதலில் யமுனை, கோமதி ஆறுகள் குறிப்பிடப்படுகின்றன. (விசுவாமித்திரரின் சம காலத்தவர் என்று இந்து பழமரபு நூல்களால் குறிப்பிடப்படுகின்ற வசிட்ட முனிவராலும் யமுனை ஆறு பேசப்படுகிறது.) கங்கை ஆறு ஒரே ஓரிடத்தில் மட்டுமே, அதுவும் அதனுடைய எட்டாவது அல்லது கடைசிப் பிரிவில் பேசப்படுகிறது. (இங்கு ஆறுகளைப் புகழ்ந்து, தற்குறிப் பேற்றமாக வேதத்தில் இசைப் பாடல்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதில் சிந்து நதி ஆண் பாலாகவும், ஏனைய நதிகளெல்லாம் பெண் பாலாகவும் கற்பித்துக் கூறப் படுகின்றது. சிந்து நதியே தலைவன்; இதற்குக் கீழ்ப்பட்டவையே மற்ற ஆறுகள்! கீழ்க்காணும் வரிசையில் அவை

அமைக்கப்பட்டுள்ளன. சிந்து – தலைவன்; கங்கை; யமுனை; சரஸ்வதி; சுதுத்ரி; அய்ராவதி;.....)

வேதங்களில் புலியைப் பற்றிய எந்தக் குறிப்பையும் நான் காணவில்லை. சிங்கத்தைப் பற்றி மட்டும் சில இடங்களில் கூறப்படுகிறது. இதனால் வேதங்களை உருவாக்கிய ரிசிகள் இவற்றை உருவாக்கிய காலத்தில் இன்னும் அவர்கள் புலிகளின் பூமியை வந்தடையவில்லை என்பது தெரிகின்றது. சரியானாவதி எனும் ஏரி, பக்திமானாகிய ரிஜிகா என்பவரது ஆட்சி எல்லைக்குள் அமைந்திருந்த தாகச் சில இடங்களில் சுட்டப்படுகிறது. இதுவே பிற்காலத்தில் குருச்சேத்திரா என்ற நாடாகியது என்று கூறப்படுகிறது.

மனுவின் சட்டத் தொகுப்பு புத்தவியலுக்கு, அதன் எழுச்சிக்கு முற்பட்டது எனத் தெரிகின்றது; கிறித்துவுக்கு முன் ஏழு அல்லது ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று அதன் காலத்தைக் கருதுவர். **மனு நூலின் பழைய பகுதிகளின் காலத்தைச் சேர்ந்த ஆரியர்கள் தங்கள் எல்லையை இண்டஸ் ஆற்றின் எல்லைக்கு அப்பாலும் (அதனைக் கடந்து) விரிவுபடுத்திக் கொண்டார்கள். அந்த நிலையிலும் கூட அப்போது ஆரியர்கள், விந்திய மலைத்தொடர்களுக்கு வடக்கில்தான் பெரும்பான்மையும் இருந்தார்கள்.**

கிழக்குக் கடற்பகுதிக்கும் மேற்குக் கடற்பகுதிக்கும், அதாவது விந்திய மலைக்கும், ஃகிமாவாட் மலைக்கும் இடையில் அமைந்துள்ள நிலப்பரப்பை அறிஞர்கள் ஆரிய வர்த்தம் (ஆரியர் வாழும் இடம்) என்று பெயரிட்டு அழைத் தார்கள் என்று மனுநூல் கூறுகிறது. ஆரிய வர்த்தம் என்னும் இந்தப் பொதுவான பகுதி, பிரம்மார்ஷி என்னும் பகுதி என்று குறிக்கப்படுகிறது. குருச்சேத்திரா, மச்சயா, பாஞ்சாலம், சூரசேனா முதலான பகுதிகளை அது உள்ளடக்கியிருந்தது. (மனு II . 19). ஃகிமாவாட், விந்திய மலைகளுக்கு இடையில் அமைந்திருந்த நாடு கிழக்கில் வினாசனா வரைக்கும் மேற்கில் பிரயாகை வரைக்கும் (பிரயாகை கங்கையும் யமுனையும் சந்திக்கும் இடம்) பரந்திருந்த அந்த நாடு மத்திய தேசம் அல்லது இடைப்பட்ட நாடு என்று வேறுபடுத்திக் காட்டப்பட்டது (மனு). இண்டஸ் ஆற்றின் கிளை நதிகளின் மேல் இருந்த ஆரியர்களின் குடியிருப்புக்களுடன் இப்போது நான்கு வேறுபட்ட ஆனால், முன்னேறிக் கொண்டு நகர்ந்து சென்று கொண்டுள்ள ஆரியக் குடியேற்றங்களை வட இந்தியாவில் நாம் பார்க்கிறோம். **தென்னகத்தை நோக்கி ஆரியர் முன்னேறி வந்தமையை இங்கு நான் விளக்கத் தொடங்கினால் அது மிக**

**விரிவாகிவிடும்.** ஆதலின் இங்கே குழுமியிருக்கும் பார்வையாளர்களை மனத்துள் கொண்டு நான் சில செய்திகளை குறிப்பிட விரும்புகிறேன். அயோதா என்னும் நகரம் சரயு நதிக்கரையில் அவர்களால் உருவாக்கப்பட்டது; இராமாயணம் எனும் புராணக் கதையால் அது பெரும்புகழ் பெற்றது. ஒரு போர்வீரன் இருப்பிடமாக அது இருந்திருக்கலாம். [ஒருவேளை பாசறையாக இருக்கலாம்]. எல்லை கடந்துவந்த தொன்மையான அய்ரியக் குடியிருப்பாளர்களுக்குத் தெரிந்ததொரு சிறப்புப் பெயர்தான் இது! [இவர்கள் குதிரைகளை அடக்குபவர்கள்; குதிரைகளோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள்]. இந்த நாட்டிலிருந்த இந்தியர்கள், தங்களது துணைக் குடியிருப்பு களில் வாழ்ந்து வந்தனர் என்பது வியப்பிற்குரியது இல்லையென்றாலும், வடக்கில், தங்கள் கடவுளரின் உறைவிடங்கள் எனக் கருதிய, விழுமியதும் கடந்து செல்ல முடியாததுமான மலை அவர்களுக்கு அப்போது தடையாக இருந்தது. வளம் மிகுந்த அந்த நாடு, தொடக்கக் காலத்தில் அந்த நாட்டின் தொன்மைக் குடிமக்களாக இருந்திருப்போம் என்று அவர்கள் எண்ணத் தொடங்கியிருக்க வேண்டும். தொலைவில் உள்ள ஒரு நிலத்திலிருந்து பிறிதொரு நாட்டில் சென்று குடியேறிய காட்சிகளை அவர்கள் மறந்திருக்க வேண்டும்.

**நர்மதை ஆற்றுக்குத் தெற்கே ஆரியர்கள் முதன்முதலாக அறிமுகமானது மதம் பரப்பும் அடிப்படை நோக்கத்தில்தான்! அதன் பின்னர் வணிகத் தொடர்பு களின் மூலமாகத் தெற்கில் அவர்களுக்குத் தொடர்பு ஏற்பட்டது. [மதத்தைப் பரப்பும்போதுகூட ஆரியர்கள் வலிந்து சென்று திணிக்கும் முறையைக் கையாளவில்லை. புனிதத் திருத்தலங்கள் என்று சில இடங்களைத் தேர்வு செய்து, கவர்ச்சியான முறையில் தீர்த்தம் தெளிப்பது போன்ற முறைகளால் தங்கள் மதச் சடங்குகளை நிகழ்த்தி மக்களைக் கவர்ந்திழுத்தனர்].** இதன் பிறகு ஆரியர்களின் குடியேற்றமும் இங்கு வாழ்ந்த மக்களை வென்று அடிமைப் படுத்திய நிகழ்வும் நடந்தேறின. **தென்னிந்தியாவில் பாண்டிய மன்னர்கள்தாம் முதன்முதலில் ஆரியர்களுக்குக் குடியிருப்புகளை [காலனிகளை] அமைத்துக் கொடுத்த இந்தப் பணியைத் தொடங்கி வைத்தவர்கள்.** சேரனும், சோழனும் ஒதுங்கி இருந்தனர் என்றே தோன்றுகிறது. பேராசிரியர் லாசன் அவர்கள் கருத்துப்படி இந்தப் பேரரசுகளின் சிறப்புப் பெயர், ஆதிக்கம் செலுத்திய வெள்ளை நிறத்தவரிடமிருந்து தோன்றியிருக்கலாம்.

கோகோ (Ghogho )வுக்கு அருகில் உள்ள தற்போது சிகார் என அழைக்கப்படும் சின்கா எனும் இனத்தவரின் தலைநகராகிய சின்காபூர் எனுமிடத்திலிருந்து சின்கா (Sinhos ) இனத்தவர், இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பகுதியில் தங்கள் ஆட்சி அதிகாரத்தை நிறுவினர். இலங்கைத் தீவை வென்று அதனை சிங்களதீபா என்று பெயரிட்டழைத்தனர். மேலும், கீழைக்கடல் பகுதியில் இருந்த பல இடங்களையும் கைப்பற்றித் தங்கள் ஆட்சி அதிகாரத்தை விரிவு செய்தனர். மகாராஷ்டிரா அல்லது மராத்தா நாட்டில் ஆரியர்கள் பெருந்தொகையினராகச் சிறப்பிடம் பெற்றிருந்தனர். கிறித்துவ ஊழியிலும் அதைத் தொடர்ந்து வந்த நூற்றாண்டுகளிலும் அதன் அருகிலிருந்த மாநிலங்களிலிருந்து அதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காக அது ஆரியகே (ARIAKE ) அதாவது ஆரியர்களின் நாடு (Land of The Aryas ) என அழைக்கப் பட்டது. இவ்வாறு அழைத்தவர்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த புவியியலாளரான டாலமி (Ptolemy ) என்பவரும் அவருடைய சமகாலத்தவராகக் கருதப்படுகின்ற கடலோடியான அட்ரியன் (Atrian ) என்பவரும் ஆவர். இதன் விளைவாக, தற்காலத்திய கன்னடியர்களில் ஒரு சில மராத்தியருக்கு ஆரியா (ஆரியர் எனும் பொருளில்) என்று பெயர் ஏற்பட்டுள்ளது. மேலும், தென்மராத்திய நாட்டில் இருக்கும் மாங் எனும் தாழ்த்தப்பட்ட பழங்குடி மக்களுக்கும் இப்பெயர் வைக்கப்படுகிறது. பாந்தர் அல்லது உண்மையான வெண்ணிறம் என்பது இன்றும்கூட மராட்டியப் பகுதிகளில் உள்ள நகராட்சிகளுக்கு உரியதாக உள்ளது. இங்குள்ள மக்கள் இந்தப் பட்டப் பெயரின் தோற்றத்தைப் பற்றி சிந்திக்கவில்லை யென்றாலும் (பாந்தர்...) இதைப்பற்றி அவர்களுக்கு நன்கு தெரியும்.

ஆரியர்களுக்கு எதிரானவர்களாக வேதங்களில் அடிக்கடி குறிப்பிடப்படுகின்ற தஸ்யூக்கள் என்பவர்களைப்பற்றி, வேறு சான்றுகள் எவற்றையும் நாம் காண முடியவில்லை; மனுதருமத்தில் மட்டும் ஒன்றிரண்டு இடங்களில் அவர்கள் குறிப்பிடப்படுகிறார்கள். தஸ்யூ என்னும் சொல்லில் இருந்து உருவாகிவந்த தாஸ் (தாசன்) எனும் சொல் முடிவில் ஒரு கொத்தடிமையைக் குறிப்பதற்குக் கொண்டு வரப்பட்டுவிட்டது. இந்தப் பொருளில் இதற்கு இணையாக நம்முடைய ஆங்கிலச் சொல் SLAVE (அடிமை) என்பது உள்ளது. SLAVE எனும் இந்தச் சொல் ஸ்லேவி (SLAVI ) இனத்து மக்களிடமிருந்து தோன்றியது. இவர்களில் பெரும்பான்மையோர், தற்காலத்தில் இவர்கள் வாழ்கின்ற பகுதிகளிலேயே அடிமைகளாக மாறி விட்டனர். வேதங்களில் குறிப்பிடப்படுகின்ற சில தஸ்யூக்களின் பெயர்களும் ஆரிய இனத்தவரின் ஏனைய எதிரிகளின்

பெயர்களும் ஆரிய மூலத்திலிருந்து தோன்றியவை எனத் தெரிகின்றது. ஆனால், இந்திய மொழிகளில் உள்ள சமஸ்கிருதமல்லாத நூல்களில் இவர்கள், சித்தியன் அல்லது துரேனியன் இனமரபைச் சேர்ந்தவர்கள் என்றும் தங்கள் வாழ்விடங்களை விட்டு இங்கு வந்து குடியேறியவர்கள் என்றும் கூறப்படுகின்றது. குஜராத்திலும் அதற்கு அண்மையில் உள்ள மற்ற மாநிலங்களிலும் காணப்படுகின்ற துரானியர்கள், இன்றும் கலி பிரஜா அல்லது கருப்பினத்தவர் என்று பெயரிட்டு அழைக்கப்படுகின்றனர். வெண்ணிறத்தவரிடமிருந்து [உயர்ந்தோர்] இவர்களை வேறுபடுத்திக் காட்டவே இவ்வாறு இவர்கள் கூறப்படுகின்றனர். என்றாலும் ஆரியர்களின் ரத்தம் இவர்களிடத்தில் அதிகமாகவோ குறைவாகவோ காணப்படுகின்றது.

**வேதகாலத்து ஆரியர்கள் முதன்மையாக நாட்டுப்புற வாழ்வினர்; அத்துடன் அவர்கள் வேளாண் தொழிலையும் செய்து வந்தனர். [இதற்கு ஏராளமான சான்றுகள் ரிக் வேதத்தில் இருக்கின்றன. இங்கு நான் குறிப்பிடும் ஒவ்வொரு கருத்துக்கும் வேதங்களில் சான்று இருக்கிறது.]** ஆரியர்களின் ஆட்டு மந்தைகள், செம்மறி ஆடுகள், கால்நடைகள், வெள்ளாடுகள், பசுமாடுகள், எருமைகள், குதிரைகள், ஒட்டகங்கள், காளை மாடுகள் ஆகியவை அடிக்கடி குறிப்பிடப் படுகின்றன. இவற்றைத் தங்களுக்குக் கொடுத்தமைக்காகக் கடவுளர்க் கும், மனிதர்களுக்கும் முறையே வழிபடு பொருளாகவும், நன்றி செலுத்துவதற்கு உரிய பொருளாகவும் இவை விளங்கின. அவர்களில் ஒரு பெண்மகள் துகித்ரி அல்லது பால்காரப் பெண் என்று பெயரிட்டு அழைக்கப்பட்டாள்.

மேலும் கோபா என்பதும் கோபால் என்பதும் அல்லது கால்நடைகளை வைத்திருப்பவர் என்பதும் பொதுவாக அவர்களுக்குள்ளே ஒரு பாதுகாவலர் என்று பொருள்பட்டது. கால்நடைகளை, பசு மாடுகளை வைத்திருந்தோர் அந்தச் சமுதாயத்தில் மிகப் பெரிய இடத்தில் இருந்தனர். நாட்டுப்புற வாழ்க்கையில் உருவான அவர்களுடைய உரை வெளிப்பாடுகள் பலவற்றில் அவர்தம் இனம் சார்ந்த பொதுவியலான பொருளை அவர்கள் மொழியில் காண முடிகிறது. தங்கள் கால்நடைகளை ஓட்டிக் கொண்டு அடிக்கடி இடம் பெயர்ந்து செல்லும் மக்க ளாகவும் அவர்கள் இருக்கவில்லை. ஆனால், அவர்களின் எதிரிகள் நாகரிகமான ஆடம்பர வாழ்க்கை வாழ்ந்தவர்களாகத் திரளாக ஒன்று கூடி வாழ்ந்த குடும்ப வாழ்க்கையினர் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்களுக்கென்று சிற்றூர்களும், நகரங்களும் இருந்தன. கால்நடைகளுக்கான இருப்பிடங்களும் அங்கு இருந்தன. வீட்டுப் பயன்பாட்டுக்கான ஆடம்பரப் பொருட்களுடன் அவர்கள் வசதியான

வாழ்க்கை நடத்திவந்தனர். அவர்கள் நெசவுத் தொழிலை நன்கு அறிந்திருந்தனர். தங்களுக்குத் தேவையான ஆடைகளை அவர்களே நெய்து கொண்டனர். இரும்பும் அவர்களுக்குப் பயன்படு பொருளாக இருந்து வந்தது. கொல்உலைத் தொழில், செப்புத் தொழில், தச்சுத் தொழில் முதலானவற்றோடு பிற கைத்தொழில்களிலும் அவர்கள் கைதேர்ந்தவர்களாக இருந்தனர். தங்கள் காடுகளில் இருந்த மரங்களை வெட்டுவதற்குக் கைக்கோடாரிகளை அவர்கள் பயன்படுத்தினார்கள். அவர்களுக்கு விருப்பமான அஷ்வதா பலாஷா [உயரிய மரவகைகள்] ஆகிய மரங்களோடு அகாசியா மரக் குடும்ப வகையைச் சேர்ந்த பிற மரங்களையும் அவர்கள் வெட்டினர். தங்கள் தேர்களை இழைத்துத் தேய்த்து மெருகூட்டி அழகுபடுத்தவும் அவர்கள் அறிந்திருந்தனர். வண்டிச் சக்கரங்களைச் சுற்றி மாட்டப்படும் இரும்பு வட்டகைகளையும் அவர்கள் செய்து கொண்டனர். கவசம், தடிகள், வில், அம்புகள், வாள், கேடயம் முதலான போர்க் கருவிகளை அவர்களே வடிவமைத்துக் கொண்டனர். சங்கொலி கேட்டவுடன் அவர்கள் போருக்கு ஆயத்தமாகுமாறு அழைக்கப்பட்டனர்.

வீட்டுப் பயன்பாட்டிற்காகவும், வழிபாட்டிற்காகவும், அவர்கள் சிறு சிறு கிண்ணங்கள், பாத்திரங்கள், நெடியதும், சிறியதுமான அகப்பைகள் முதலான வற்றை அவர்களே செய்து கொண்டார்கள். தங்கள் தலைமுடியை வெட்டிக் கொள்வதற்குத் தொழில்முறையிலான நாவிதர்களை அவர்கள் அமர்த்தி யிருந்தனர். விலை உயர்ந்த உலோகங்களையும், கற்களையும் வணிகப் பயன் பாட்டில் எப்படி மாற்றுவது என்பதைத் தெரிந்து வைத்திருந்தனர். பொன்னாலான காதணிகள், வைரக் கழுத்தணிகள், பொன்வட்டில்கள் முதலானவற்றை அவர்கள் பயன்படுத்தி வந்தனர். தங்களுக்குப் பயன்படும் விலங்குகளைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர்.

தொல்பழங்காலத்து எகிப்தியர்களைப் போல அவர்கள் போர் செய்வதற்காகத் தேர்கள் வைத்திருந்தனர். போக்குவரத்துக்காகக் குதிரை வண்டிகளையும் மாட்டு வண்டிகளையும், பயன்படுத்தினார்கள். குதிரை களையும், மாடுகளையும் கவனித்துக் கொள்வதற்காகப் பணியாளர் இருந்தனர். எகிப்தியரிடம் இதனைக் காண்பதற்கில்லை. நன்கு பயிற்சி கொடுக்கப்பட்ட தங்கள் குதிரைகளைப் பற்றியும், சிறந்த குதிரை, தேர்ப்படை வீரர்களைப் பற்றியும் பேசுவதில் அவர்கள் பெருமிதம் கொண்டனர்; மகிழ்ச்சியடைந்தனர். தங்களது வண்டி வாகனங்களைப்

புகழ்ந்து பேசி மகிழ்ந்தனர். அவர்களுடைய இளவரசர்கள், குருமார்கள், கடவுளர்கள் ஆகியோர் சில நேரங்களில், குதிரை இனத்தோடு தொடர்புடைய பெயர்களையும் பட்டங்களையும் பெற்றிருந்தனர். யானைகளைப் பழக்கி அடக்கி வைத்திருந்தார்கள்! ஆனால், தென்னகத்தின் தொல்குடி மக்களைப்போல இவர்கள், போர் செய்தல் போன்ற வேலைகளுக்கு யானைகளைப் பயன்படுத்தி னார்களா என்பது உறுதியாகத் தெரியவில்லை. மருத்துவக் குணமுடைய சில மூலிகைச் செடிகளை அவர்கள் நன்கு அறிந்து வைத்திருந்தார்கள். சோமலதா அல்லது நிலவுச் செடி என்னும் தாவரத்திலிருந்து குடித்து மகிழ ஒருவகை மதுவை அவர்கள் உருவாக்கினார்கள். மருத்துவக் குணமுடைய அந்தச் சாறு [சர்வோஸ்டமா விமினாவிஸ்] கடவுளர்க்கும் மனிதர்க்கும் போதையூட்டு வதற்கும் மகிழ்ச்சியில் திளைப்பதற்கும் [இருவர்க்கும்] ஏற்புடையது என்று அவர்கள் கருதினார்கள். கிரிட்டா அல்லது நெய், அவர்களின் பின்னோர்க்குப் பயன்பட்டதைப் போலவே அவர்களுக்கும் பயன்பட்டது. பார்லி கஞ்சியின் புளிப்புத் தன்மை அவர்களுக்குப் புதியதல்ல; அந்தச் சமூகத்தில் கஞ்சியும் உணவாக இருந்தது.

தீயொழுக்கமுடைய பெண்கள் நகரங்களில் காணப்பட்டனர்; தங்கள் செயலைப் பற்றி அவர்கள் பெரிதும் வெட்கப்பட்டதாகத் தெரியவில்லை. சாராய விற்பனையாளர்களிடம் இவர்கள் இணக்கமாகவே இருந்தனர். [தற்கால இந்துக்களின் அமைப்பு முறையின்படி சாராயம் குடிப்பது மாபாதகச் செயல் அல்லது மாபெரும் குற்றமாகக் கருதப்படுகிறது. தாயோடு உறவு கொள்ளல் அல்லது ஒரு பார்ப்பனனைக் கொலை செய்வதற்கு இது ஒப்பானது என்று கூறப்படுகிறது.]

அவர்களுக்கென்று நீதிமன்றங்களை அவர்கள் வைத்திருந்தார்கள். அவர்களின் வழிபாட்டுமுறை, மனையை விட்டகலாத குடும்பம் சார்ந்த வழிபாட்டு முறையாக இருந்த போதிலும் பலியிடும் அரங்குகளும் பலிப் பொருளை உண்ணும் அரங்குகளும் வெளியில் இருந்தன. **இவற்றோடு உருவ வழிபாடு ஒருபோதும் தொடர்புபடுத்திக் கூறப்படவில்லை.** பரிசில், படகு, தெப்பம், கப்பல் முதலானவற்றை அவர்கள் கட்டினார்கள். அவர்கள் வழக்கமாக வாழ்ந்த இடங்களிலிருந்து தொலைவில் உள்ள இடங்களுக்கு வணிகத்தின் பொருட்டுப் போக்குவரத்தில் ஈடுபட்டனர். தங்கள் நாட்டு எல்லைக்குள் கிடைக்காத பொருள்களில் அவர்களின் கண்களுக்குப் பட்டது காந்தார் ஆடுகளின் மெல்லிய மயிர்தான்! அவர்களுடைய இசைப் பாடல்களில் கடலைப் பற்றிய பாடல் எப்போதாவது இடம் பெற்றிருக்கும்;

இண்டஸ் ஆற்றில் பயணம் செய்து கடலை அடைந்ததன் விளைவாக இத்தகைய பாடல்கள் எழுந்தன எனலாம். அவர்களில் சிலர் பிறர் பொருளைக் கவரும் எண்ணத்துடன், மரக்கலங்களில், கூட்டங் கூட்டமாகக் கடலிற் பயணிப்போரை மனத்திற் கொண்டு சென்றனர். அயல்நாடு செல்வதற்காக மேற்கொள்ளப்பட்ட ஒரு கப்பல் பயணம், கப்பல் பாறை மீது மோதியதால் ஏற்பட்ட ஏமாற்றத்தோடு முடிவடைந்ததாகக் குறிப்பாகச் சுட்டப்படுகிறது. அண்டை நாட்டு இளவரசர்களுக்கு அவர்கள் தூதுவர்களை அனுப்பினார்கள். ஆனால், பக்கத்து நாடுகளுக்கு அடிக்கடி சென்று வருவதை அவர்கள் விரும்பவில்லை எனத் தோன்றுகிறது. அவர்களது நாட்டின் புகழ் வாய்ந்த ஆறு, மோசசின் காலத்திலேயே எகிப்தியர்களுக்கு நன்கு தெரிந்திருந்தது. பி சோன் சிந்து, [இதில் பி-சோன் என்பது எகிப்தியச் சொல்] [காபூலில் இருந்து வந்த இதன் கிளைஆறு வடக்கு நோக்கிச் செல்வது] என்று குறிப்பிடப்படுகிறது.

இப்போது நாம் குறிப்பிட்டுப் பேசும் இந்தக் காலகட்டத்தில் எழுத்து வடிவிலான கலைப் படைப்புக்கள் எதையும் ஆரியர்கள் பெற்றிருக்கவில்லை. ஓதுவதற்காகவே வேதங்கள் செய்யுள் வடிவில் அமைக்கப்பட்டன. ஆதலால் அவை சுருதிகள் என்று பெயர் பெற்றன. அதாவது அவை கேட்கப்படுபவை என்று பெயரிடப்பட்டன.

வேதங்களுக்கு முற்பட்டவை என்று நாம் முன்னரே குறிப்பிட்ட இந்துக்களின் தொன்மைசான்ற தத்துவ நூல்கள் எல்லாம் சூத்திரங்களாகவும், சிறுசிறு கண்ணிகளாகவும் நினைவில் நிற்கக்கூடிய நூற்பாக்களாகவும் வடிவமைக்கப் பட்டுள்ளன. மனுதருமத்தின் அமைப்பு ஸ்மிருதி வடிவில், அதாவது நினைவிற் கொள்ள வேண்டியது என்னும் பொருளில் அமைந்துள்ளது. இந்துக்களின் மிகப் பெரிய காப்பியங்கள் என்று கருதப்படுகின்ற இராமாயணமும், மகாபாரதமும் வடிவ அமைப்பில் மிகவும் தொன்மை சான்றவை, ஆதலால் அவை புத்தர் காலத்திற்கு முற்பட்டவை என்று கருதப்படுகின்றன. பேராசிரியர் லாசென் இவை இரண்டும் வாய்மொழியாகப் பின்னையோர்க்கு வழங்கப்பட்டு வந்தவை என்று மிகச் சரியாகவே குறிப்பிடுகின்றார். இக்கருத்து அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்தாகும். [பேரா. லாசன் இவ்விரண்டு காப்பியங்களைப் பற்றிய பல சுவையான செய்திகளைத் தெரிவித்துள்ளார். சடங்குகள், திருவிழாக்கள் நடைபெறும் காலத்தில் இவற்றைப் படிப்பார்கள்; இவை முதன்முதலாகப் பெற்ற, வடிவத்திற்கும் அடுத்த வடிவத்திற்கும் நீண்ட கால இடைவெளி இருந்துள்ளது. வால்மீகி, இராமனின் சமகாலத்தவர்

என்று கூறப்படுவதனால் இராமாயணத்தின் ஆசிரியர் வால்மீகி என்று கூற முடியாது. மகாபாரதம், இராமாயணத்திற்கு முற்பட்டது; வியாசர் என்பவர் அதனைத் தொகுத்தவர். ஓர் அரசனுக்குத் திரும்பத் திரும்பச் சொல்லப்படுகின்ற ஒரு வீரகாவியமாக அது விளங்கவில்லை. பார்ப்பன பலியீட்டின்போது அது திரும்பக் கூறப்படும் ஒரு வீரகாவியமாகவே தோன்றுகிறது.]

தற்போது இந்தியாவில் காணப்படும் குரல் ஒலிப்புமுறை, எழுத்து முறை, குகைக் கல்வெட்டுக்களில் சதுரமாகவும் வட்டமான வடிவிலும் காணப்படுகின்ற நாகரி எழுத்துக்களின் மூலம், அதன் திருந்திய வடிவம், ஃபெனீசியன், கிரேக்க எழுத்துக்களிலிருந்து தோன்றியதாகும். அலெக்சாண்டரின் படையெடுப்புக்கு முன்னரே இந்தியாவில் கிரேக்க எழுத்துக்களின் தாக்கம் நிகழ்ந்திருக்கிறது. வடஇந்தியாவில் காணப்படும் எழுத்துக்களின் மற்றொரு பண்புக்கூறு, செமிட்டிக் மொழியிலிருந்து பெறப்பட்டதாகும். அசோகனின் காலத்திலும் அதற்குப் பின் பேக்டீரியன் அரசர்கள் காலத்திலும் செமிட்டிக் மொழியின் தாக்கம் வட இந்தியாவில் இருந்துள்ளது. பேக்டீரிய மன்னர் வெளியிட்ட நாணயங்களிலும் இந்த எழுத்து முறை காணப்படுகிறது. கிரேக்கர்கள் இங்கு வருவதற்கு முன்பாகவே இந்தியாவின் வடக்கு எல்லைப்புற நாடுகளில் இந்த மொழிக் கூறுகள், பண்புகள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்த நிகழ்வுக்குப் பிறகு, மேற்கத்திய நாட்டிலிருந்து தனித்தன்மை வாய்ந்த எழுத்துமுறை கொண்டு வரப்பட்ட பிறகு [வடஇந்திய] இந்த எழுத்துமுறையை மேலும் செப்பமான முறையில் செய்துருவாக்கல் பணி அதிகம் தேவைப்படவில்லை. அது அசிரிய, பாபிலோனிய, பெர்சிய ஆப்பு வடிவ எழுத்து முறைக்கு முந்தியதாக இருக்கலாம். எழுதுவது என்பதை அதுகுறித்த போதிலும் உண்மையில் செதுக்குவது அல்லது வரிசையாக வெட்டி வைப்பது என்றே பொருள்பட்டது; அல்லது சீனர்களின் ஒலியைக் குறித்துக்காட்டாத, சொல்லின் கருத்துக் குறியீட்டு எழுத்துவகை மாதிரி, இதனை முந்தியதாக இருக்கலாம்.

சமஸ்கிருதத்தில் எழுதுகோலைக் [பேனாவைக்] குறிப்பதற்குப் பயன்படும் சொற்களில் ஒன்று அக்சராட்டுலிகா அல்லது எழுத்துத் தூரிகை என்பது; இது பின் கூறப்பட்ட கருத்து யூகத்திற்குப் பொருந்துகிறது. எழுதுவது என்பதற்குப் பொதுவாகப் பயன்படுத்தப்படும் சொற்களில் லிபி என்பதும் ஒன்றாகும். லிபி என்னும் இச்சொல் வண்ணம் பூசு, எண்ணெய் பூசு அல்லது வண்ணக் கலவை மேற்பூசு என்பனவற்றைக் குறிக்கக்கூடிய

ஒரு வேர்ச்சொல் மூலத்திலிருந்து தோன்றியதாகும். முதலில் படம் வரை எழுத்துக்களுக்கு ஒருவேளை இது பயன்படுத்தப்பட்டிருக்கலாம்; மாஷி அல்லது மை என்பது புகைக்கரியிலிருந்து உருவாக்கப்பட்டதாக இருக்கலாம். இந்த எழுத்து முறைகளை உருவாக்கு வதற்குப் பயன்படுத்தப்பட்ட நீர்மப் பொருள் இதுவேயாகும். வர்ணா எனும் சொல் அகர வரிசையில் ஓர் எழுத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டது; முதலில் அது வண்ணம் [நிறம்] என்று பொருள்பட்டது. தொன்மைக் காலத்தில் கருத்துக் குறியீட்டின் அடையாள மாகப் படம் என்ற பொருளில் வழங்கப்பட்டு வந்தது என்பதை ஒருவாறு நான் உறுதிசெய்து கொண்டேன். இந்தியக் குகைகளில் உள்ள கல்வெட்டுக்களில் காணப்படும் இந்துக்களின் மிகப் பழமை வாய்ந்த எண்ணு முறை அமைப்பு – கிறித்துவ ஊழிக்கு முற்பட்டதும், அதனைத் தொடர்ந்து வருவதுமான இந்த எண்முறை அமைப்பு சீனர்களிடமிருந்து பெறப்பட்டதாகும். என் சொற்பொழிவின் இறுதியில் இதுபற்றி நான் விளக்குவேன். இவற்றோடு மேலும் ஒரு கருத்தை நான் இணைக்க விரும்புகிறேன். தமக்கே உரித்தான, சொந்தமான ஓர் அகரவரிசையை [எழுத்துக்களை] இந்தியர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை என்றாலும் அவர்கள் தங்கள் கருத்து வெளிப்பாட்டிற்கான மாறுபடாத சிறிய ஆற்றல் உடைய எல்லா ஒலிகளையும் உள்ளடக்கிய ஓர் அகர வரிசையை அவர்கள் பெற்றிருந்தார்கள் என்னும் ஒரு தனிப் பெருமைக்கு உரியவர்கள் ஆனார்கள்!

மேலும் அவர்கள் [இந்தியர்கள்] வானியல் பற்றிய கணிப்புகளையும் தெரிந்து வைத்திருந்தனர் என்பது உறுதி. பேராசிரியர் வில்சன் குறிப்பிடுவது போல் அவர்கள் வேத காலத்திலேயே சூரிய ஆண்டையும், நிலா ஆண்டையும் இணைத்துச் சரிப்படுத்திக் கொள்வதற்கு இடைச் சேர்ப்பாக ஒரு மாதத்தையும் வைத்திருந்தார்கள். கிரேக்கர்களுக்கு முன் இவர்கள் நாணயங்களைப் புழக்கத்தில் விட்டிருந்தார்கள் என்று நான் கருதவில்லை. வேதங்களின் காலத்திலேயே இவர்கள், பொன்னையும், விலைஉயர்ந்த கனிமங்களையும் அவற்றின் எடைக் கனத்தைக் கொண்டு பயன்படுத்தினர். மனுவின் காலத்தில் சிறுசிறு தங்கத் துண்டுகளும், வெள்ளித் துண்டுகளும் மக்கள் வழக்காற்றில் இருந்தன. மற்ற நாடுகளில் அப்போது வழக்கிலிருந்த நாணயங்களில் பொறிக்கப்பட்டிருந்த முத்திரைகளைப் போல இத்துண்டுகளின் மீதும் அவற்றின் எடை அளவை அறிந்து கொள்வதற்காக முத்திரை பதித்திருந்தனர்.

வேதங்கள் செய்யுள் வடிவில் அமைந்துள்ளன என்பதை நாம் ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். அவை பல்வேறு சந்தாக்கள் அல்லது அளவுகளைக் கொண்டுள்ளன. இந்த அளவுகள் எல்லாம் சமஸ்கிருத மொழிக்குத் தக்கவாறு செய்யுள்களாக மாற்றியமைத்துக் கொள்ளத்தக்க வகையிலும் ஓதுவதற்கேற்ற வாறும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த அளவுகளில் ஏழு அளவைகள், சில நேரங்களில், அக்னி என்ற கடவுளின் ஏழு வாய்களைப் போல, ஒன்றாக இணைத்துக் கூறப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பாலானவை சில நேரங்களில் அந்தத் தொகுப்பிலேயே திரும்பவும் எடுத்துக் காட்டப்படுகின்றன. இவற்றில் முதன்மையானவை காயத்ரி, திருஷ்டப், ஜகாதி என்று அழைக்கப்படுகின்றன. இந்த நேரத்தில் அவற்றின் தனித்தன்மைகளை விளக்கிப் பேசுவது தேவையற்றது என்று நான் கருதுகிறேன்.

வேதங்களின் இசைப் பாடல்கள் சுக்தா அல்லது லாதேஷன் என அழைக்கப் படுகின்றன. இவற்றில் குறிக்கப்படுகின்ற கடவுளர்கள், அவர்கள் பெற்றிருப்ப தாகக் கருதப்படுகின்ற திறன்களின் அடிப்படையில் அவர்கள் வேண்டிக் கொள்ளப்படவில்லை; மாறாக வழிபடுவோரின் விருப்பங்களையும் நன்மை களையும் அவர்களிடமிருந்து [கடவுளிடமிருந்து] பெற்றுக் கொள்வதற்காகவே அந்தக் கடவுளர்கள் புகழ்ந்து பாடப்படுகிறார்கள். இவர்களை வழிபடுவோர் இவர்களிடம் வேண்டுவன யாவும் பொருளியல் சார்ந்தவையாகவே இருக்கின்றன. மழையை வேண்டும்பொழுது, தங்கள் வயல்களை வளப்படுத்த வேண்டும் என்றும், செல்வத்தை வேண்டும் பொழுது, கால்நடைச் செல்வத்தை [ஆடு, மாடுகளை] வழங்க வேண்டும் என்றும் வேண்டுகின்றனர். ஆனால், குழந்தைகளைப் பற்றி வேண்டுகிறபோது, **சிரார்த்தம், ஈமச் சடங்குகள் முதலானவற்றைச் செய்வதற்குக் குழந்தைகள் வேண்டும் என வேண்டிக் கொள்வதைப் பற்றிய குறிப்பே இல்லை. பிற்காலத்தில் இந்துக்களின் வேண்டுதல் களில் இது முகாமையான இடம் பெற்றிருந்தது.** உடல் நலத்தைப்பற்றி வேண்டுகையில் வலிமை, ஆற்றல், திறன் ஆகியவற்றையும், வெற்றியைப் பற்றி வேண்டுகையில் தங்கள் எதிரிகளை அடிமைப்படுத்து வதற்குத் துணைபுரிய வேண்டும் என்றும் அவர்கள் வழிபட்டு வேண்டிக் கொண்டனர். மாயையின் அழிவைப் பற்றிய சூத்திரங்களுக்கு [சுக்தா]ச் சில சிறப்புத் தன்மைகளைக் கொடுத்து அதனுடன் இணைத்திருக்கிறார்கள். இவற்றில் ஒன்று ரிக் வேதத்தின் இறுதி அஷ்டகாவிற்குக் கடைசியில் வருகிறது. அது உடலின் அனைத்து உறுப்புக்களிலுமுள்ள நோய்களை நீக்குமாறு வேண்டி ஓதப்படும் மந்திரமாகும்.

இந்த வேத இசைப் பாடல்களின் ஒரு சிறிதளவு பார்வை பட்டால்கூட, இந்த நாட்டு மக்களின் உற்பத்திக்கு (குழந்தைகள் உட்பட) அது புனிதமானதொரு தன்மையைக் கொடுக்கும் என்று பிற்காலத்து இந்து ஆசிரியர்கள் கூறினார்கள். பிரம்மா அல்லது வேறு எந்தக் கடவுளின் வாயிலிருந்தும் வேதங்கள் வெளிப்பட்டதாக அவர்கள் கூறினால் அது முழுவதும் தவறானதாகிவிடும். (என்று கருதப்பட்டது). அவற்றின் சூத்திரங்கள், பொதுவாக அவற்றை உருவாக்கிய மனிதர்களின் – ஆசிரியர்களின் பெயர்களைப் பெற்றிருக்கின்றன. அவற்றின் தொகுப்பிலும் இப்பெயர்கள் பல இடங்களில் காணப்படுகின்றன. தத்துவ ஆய்வு நூல்கள் சிலவற்றிலும் வேறு சில நூல்களிலும், இப்பெயர்கள், இவற்றை ஓதக்கூடாத வாய்மொழிப் பாடகர்களின் பெயர்கள் என்னும் குற்றச்சாட்டு முன் வைக்கப்படுகிறது. ஆனால், வேத இசைப் பாடல்களின் உள்ளடக்கப் பொருளை உற்று நோக்கும்போது இக்குற்றச்சாட்டு ஏற்கத் தக்கதாக இல்லை. கிரேக்கக் கவிஞர்கள், தங்கள் பாடல்கள் நன்முறையில் உருவாக வேண்டி உதவிக்கு வருமாறு அவர்தம் கலைத் தெய்வத்தை வேண்டி வணங்குவதைப் போலவே, இங்கும், முனிவர்கள் (சாதுக்கள்) தங்கள் இசைப்பாடல்கள் நல்ல வண்ணம் அமைவதற்குக் கடவுளரின் துணையை வேண்டி வணங்குகின்றனர். இத்தகைய பகுதிகள் பின் வருவனவற்றைப் போல வேதங்களில் அமைந்து கிடக்கின்றன. செல்வத்தில் விருப்பமுள்ள ஓ! அக்கினியே! இந்திரனே! உங்களை என் மனத்தில் வைத்துச் சிந்தனை செய்கிறேன். உற்றார் உறவினராகவும் சுற்றத்தாராகவும் உங்களை நான் கருதுகிறேன். நீங்கள் எமக்கு அளித்துள்ள, வேறு எவரும் தராத தெளிந்த புரிதல்களின் அடிப்படையில், நான் இந்தப் பாடலை உங்களுக்காக இயற்றி உள்ளேன். எம்முடைய உடல் நலத்தையும் வாழ்வாதாரத்தையும் பேணி உதவுமாறு எம் விருப்பங்களை அதில் தெரிவித்துள்ளோம். இந்தப் புகழ்ச்சி – மாருட்ஸ் அவருடைய இசைப்பாடல்களின் வழியாக மதிப்பிற்குரிய ஓர் ஆசிரியர் உமக்கு மகிழ்ச்சியை அளிக்கிறார். உம்முடன் இருப்போரின் நன்மைக்காக இந்தப் புகழ்மாலை உம்மை வந்தடையட்டும்! அதனால் உணவும், வலிமையும், நீண்ட வாழ்க்கையும் எங்களை வந்தடைவதாகுக! இதே இசைப்பாடல் சொல் மாற்றமின்றி வேறோர் இடத்திலும் அப்படியே திருப்பிக் கூறப்படுகிறது. இந்த வழிபாட்டுப் பாடலை கிரிட்சாமதாஸ் இயற்றினார்; இந்தப் புகழ்ச்சிகள் அஷ்வின்ஸ் உங்களின் பெருமகிழ்ச்சிக்காக! சினம் தணிந்து இவற்றால் அமைதி அடைவீராக! சடங்குகளின் தலைவர்களே! இங்கே வாருங்கள்! பின்வருவோரால், திறன்மிக்க அவர்களால் வாழ்த்தப் பெறுவீர்கள்! இந்த உயிர்ப் பலியின்போது உங்களைச் சிறப்பான முறையில் நாங்கள் பெருமைப்படுத்துகிறோம்.

இதைப் போன்ற பல பகுதிகள் மாற்றம் ஏதுமின்றி வேதங்களில் பல இடங்களில் காணப்படுகின்றன. **புத்துணர்ச்சியுடன் அதுவும் மனிதநிலைக்கு மேம்பட்ட ஒருவரிடமிருந்து, பிழையில்லாத – தவறில்லாத வழிகாட்டுதல், வேத இசைப்பாடல்களில் வேண்டப்படுவதைக் காண முடியவில்லை.**

ஆராய்ச்சித் துறையில் சிறந்து விளங்கும் அறிஞர்கள் ஆரியர்களும் நாமும் ஒரே மூல இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை ஒப்புக் கொள்கின்றனர். ரிக் வேதத்தின் பதிப்பாசிரியராகிய டாக்டர் மாக்சு முல்லர், இதனை உறுதியுடன் உண்மையென வெளிப்படுத்துகிறார். இந்தோ டியூடோனிக் மொழிக் குடும்பத்தில் உள்ள மொழிகளுக்கு இடையே உள்ள நெருங்கிய உறவுகளை உணர்ந்து கொள்ளாமல், சேகரிக்கப்பட்ட சான்றுகளை மட்டும் நோக்குவது சரியானதன்று; இந்தச் சொற்கள் எல்லாம் ஓர் உண்மையான மொழியின் எச்சங்கள், ஒரு காலத்தில் ஒன்றாக இருந்த ஓர் இனம் பேசிய மொழி அது, அந்த மொழியின் எச்சங்களைப் பிற்காலத்தில் வரலாற்றாசிரியர் உணர்ந்து கொள்வது மிகக் கடினமான பணியாகப் போய்விட்டது; யூதர்களின் புனித நூல்களைப் படைத்தோரைப் புரிந்து கொள்வது அவர்களுக்குக் கடினமாக இருக்கவில்லை. இருந்தபோதிலும், தொன்மை சான்ற அந்தக் காலத்தின் பழம் பொருள்களான நினைவுச் சின்னங்கள் இப்போது நம் கைகளில் இருக்கின்றன.

அறிஞர் பாப் அவர்களால் எடுத்து விளக்கிக் கூறப்பட்டுள்ள சொற்களின் வேற்றுமைப் பாகுபாடு, ஒப்பீடு, ஒன்றிணைவு முதலானவற்றை ஆராய்ந்து பார்க்கும்போது, நூற்றுக்கணக்கான சொற்கள் புராணக் கதைச் சிறு தெய்வங்களைப் பற்றியனவாகவும், வானியல் கோள்களைப் பற்றியனவாகவும், புவியியல் பெயர் சார்ந்தனவாகவும் இருப்பதை நாம் காணமுடிகிறது. பருப்பொருள் கூறுகளில், நாள்கள், மாதங்கள், பருவங்கள், ஆண்டுகள் இவற்றில் ஏற்படும் மாறுதல்களில்; நம் உடல் உறுப்புக்களில், அறிவுசார் உழைப்பில், உடல்சார்ந்த உழைப்பில், நம் குடும்ப அமைப்புகளில், நம் உறவினர்களின் தகுதிப் பாடுகளில், நம்முடைய சமூகச் சார்பு நிலையில், விலங்குகளின், தாவரங்களின் பெயர்களில், அவற்றின் பாகங்களில், நம் வீடுகளில், தட்டுமுட்டுப் பொருள்களில், கருவிகளில், மதச் சடங்குகளில், வழிபாடுகளில்; அவர்களின் செயற்பாடுகளில், இயக்கங்களில், நோக்கங்களில், அவற்றின் விளைவுகளில், முடிவுகளில் இவை அனைத்திலும் தோற்றத்திலும், இவற்றின் வெளிப்பாடுகளிலும் இவை ஒன்று போலவே இருக்கின்றன.

இன்றுவரை இந்த ஒற்றுமை நிலவுகிறது. ஆகவே ஆரியர்களும் நாமும் [வெள்ளையரும்] உடன் பிறந்தாரின் பிள்ளைகள்; மனிதக் குடும்பத்தில் நாம் இருவரும் நெருங்கிய உறவினர்கள் என்பது வெளிப்படை.

இந்த மக்களில் ஒரு பிரிவினர் தெற்கு நோக்கிப் பயணமானவர்கள், மலைக் கணவாய்களைக் கடந்து இண்டஸ் ஆற்றை நோக்கி இந்தியாவிற்குள் வந்தார்கள். தங்கள் செம்மறியாடுகளையும், வெள்ளாடுகளையும் பின்தொடர்ந்து [மேய்ச் சலை நோக்கி] அவர்கள் சென்றார்கள்; அங்கு வாழ்ந்த துரேனிய, தஸ்யூ மக்களின் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பல்வேறு தட்பவெப்ப நிலைகளுக்கு அவர்கள் ஆட்பட்டு வந்தமையால், அவர்களின் தோலில் கருநிறம் ஏற்படத் தொடங்கியது. இவர்களில் இன்னொரு பிரிவினர் மேற்கில் நீண்ட தொலைவு அலைந்து திரிந்து, அங்கேயே தங்கள் வாழ்விடங்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்தவர்கள். மூவாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர், தங்கள் கப்பல்களோடும், பொருட்களோடும் இந்தியாவுக்குள் வந்தனர். அவ்வாறு வந்தவர்கள் ஏற்கனவே இங்கு வந்து குடியேறி வாழ்ந்து கொண்டிருந்த ஆரியர்களையும், தஸ்யூக்களையும் அடக்கி ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள். **இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சியின் தொடக்கம், பிரிந்து போன ஒரு பெரிய குடும்பத்தின் உறுப்பினர்கள் ஒன்று சேர்ந்ததைக் குறிக்கும் படியாக அமைந்துவிட்டது. பிரிந்தவர் இணைந்த அந்த நிகழ்வுகூட, மிக நெருக்கமானதாக இல்லை** . அதற்கு முதன்மையான காரணம் ஜாதிதான்! இந்தக் கூட்டத்தின் மய்யப் பொருளைவிட்டு அதற்கு அப்பால் அது அய்ரோப்பிய அல்லது இந்தியக் கால்வழி மரபின் பெருமையோ சிறுமையோ அதற்கு அப்பால் செல்ல நான் விரும்பவில்லை. **இன்னும் இந்த நிலத்தில் இருள்சூழ்ந்து கிடக்கிறது! அய்யகோ! மாபெரும் இந்த நிலத்தில் வெறுப்பு, பிரிவு, மன முறிவு, பிணக்கு, கொடுங் கோன்மை ஆகியவை மூலவிசையாக இருக் கின்றன.** பல தலை முறைகளுக்கு இது இந்தியாவின் சாபக்கேடாக விளங்கப் போகிறது! அறிவுக்குப் பொருந்தாத வெறிபிடித்த [ஜாதிய] நிறுவனங்கள் தவறான பாதையைச் சார்ந்து நின்று ஏமாற்றுகின்றன. இந்தியாவில் உள்ள பிரிட்டானிய அரசாங்கம் பொறுமையுடன் இதனை எதிர்கொண்டு வருகிறது. கிறித்துவத் தேவாலயம் நேர்மையான முறையில், வெளிப்படையான, அமைதியான முறையில் மதத்தைப் பரப்பி வருகிறது. கடவுளின் கருத்தைப் பரப்புவதற்காக மட்டுமே அதனை நம்பியே தன் பதாகைகளை அது விரித்துள்ளதாக மனமார ஒப்புக் கொள்கிறது. தற்போது ரத்தத் தாலும் புழுதியினாலும் மூடப்பட்டுக் கிடக்கும்

அருவருப்பான மக்கள் நடமாட்ட மில்லாத பாழ்பட்ட நிலமாகக் கிடக்கும் இந்த நாடு கடவுளின் பார்வையில் – மனிதரின் கருணை மிகுந்த பார்வையில் இது சிறந்து விளங்குவதாகுக!

இந்தச் சொற்பொழிவில் ஒரு சுவையான உண்மையை எடுத்து மொழிவதற்கு என்னை இக்கருத்து அழைத்துச் செல்கிறது. முறையாகச் சொல்வதென்றால் வேத காலத்தில், தொல்பழங்காலத்து இந்தியர்களிடம் ஜாதி ஒரு நிறுவனமாக இயங்கியதில்லை; அதனைக் காண்பது அரிதாகவே இருந்தது. ரிக் வேதத்தின் அஷ்டகாவில்வரும் கடைசிப் பகுதியில் வரும் புருஷ சுக்தாவில் முதன்முதலில் ஒரு ஜாதிய முறை குறிப்பிடப்படுகிறது. அதுவும்கூட, தெளிவில்லாத முறையில், வளர்ச்சியற்ற முறையில் காணப்படுகிறது. அதன் சொல்லாட்சி முறையும் பல தெய்வ வழிபாட்டுணர்ச்சியும் இதனை உறுதிப்படுத்துகின்றன. தொன்மைமிக்க இந்த வேதங்களின் கலப்படமில்லாத எந்தப் பகுதியிலும் இதுபற்றிக் குறிப்பிடப் படவில்லை. ஆனால், மனுவின் [தருமத்தின்] காலத்திலேயே ஜாதிய அமைப்பு நிலவியிருந்ததாகவும், இந்த அமைப்பு உருவாக்கம் அவரைச் சேர்ந்தது என்றும் வழிவழியாகக் கூறப்பட்டு வருகின்றது. **அய்ரோப்பாவைச் சேர்ந்த கீழைப்புல ஆராய்ச்சியாளர்கள், இந்த முறை வேதங்களில் இணைப்பாகப் பிற் காலத்தில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்ற முடிவிற்கு வருகிறார்கள்.** ஜாதிய அமைப்பு முறைக்குக் கொடுக்கப்படும் சான்றாதாரம் கூட ஓர் எல்லைக்குட் பட்டதாகவே இருக்கிறது. மேற்கண்ட கருத்திற்கு, அதாவது ஜாதி அமைப்புக்குப் பெரிதும் ஒத்திருக்கும் பகுதி வருமாறு:-

அவர்கள் புருஷரை உண்டுபண்ணியபோது அவனை

எத்தனைப் பகுதிகளாகப் பிரித்தார்கள்? அவனுடைய

வாய் என்ன? அவனுடைய கைகள் எவை?

அவனுடைய தொடைகளும் காலின் கீழ்ப்பகுதிகளும் என்ன? என்று அறிவிக்கப்பட்டன?

பார்ப்பான் அவனுடைய வாயாகவும், இளவரசர் [போர்வீரர்] அவனுடைய கைகளாகவும், வைசியன் தொடைகளாகவும், சூத்திரன் அவனது காலடிகளாகவும் அதாவது கால்களில் தோன்றியவனாகவும் குறிப்பிடப்படுகிறது. இது அத்தொகுப்பில் நுண்பொருளாகவும், வெளிப்படையாக இல்லாமல் குறிப்பாகச் சுட்டிக் காட்டுகின்ற வகையிலும் அமைந்துள்ளது. **இது முதன்மையாகக் கீழ்வரும் கருத்துப் பண்பை**

**வெளிப்படுத்துகிறது; பிராமணன், கடவுளின் விருப்பங்களை நமக்கு விளக்கியுரைப்பவர்; மிகப் பெரிய மனிதராகக் கருதப்படுபவர்; மேலும் கடவுளர்க்குப் படைக்கப்படும் கொடைப் பொருள் களையும் படையல்களையும் பெற்றுக் கொள்பவர்;** இவரே அந்த [ஆண்] புருஷரின் வாயாகத் திகழ்பவர்; இளவரசர் அல்லது போர்வீரர், குற்றச் செயல்களைத் தடுப்பதற்கும் பாதுகாப்பிற்கும் உரிய கருவியாக விளங்குபவர், இவரே அந்த புருஷரின் தோள்களாகத் திகழ்பவர்; வைசியர் வேளாண் தொழில் செய்பவர்; அதன் செல்வம் அனைத்தையும் பெற்றிருப்பவர்; இவரே அந்த புருஷரின் தொடைகளாக விளங்குபவர்; சூத்திரன் அல்லது அடிமை, அவர் உடம்பின் கீழ்ப்பகுதியில் கடைநிலையில் உள்ள உறுப்பினர், இவரே அவருடைய [பாதங்கள்] காலடிகள் ஆவார். **இவையெல்லாமே நுண் பொருளாகவும், உருவகப் பொருளாகவும் மட்டுமே கூறப்பட்டுள்ளன; பிற்காலத்தில் இவை வரலாறாகவும் கோட்பாடுகளாகவும் பார்க்கப்படலாயின.**

**வேதங்களின் நேர்மையான சிறந்த பகுதிகளை நாம் உற்று நோக்கும் போது, வேதகாலத்தில் ஜாதி இருக்கவில்லை என்ற முடிவிற்கு [ஊகம்] நாம் வருவது உறுதிப்படுகின்றது.**

1.பார்ப்பனர்கள் ஒருவகைத் தொழிற் பிரிவினராகவே குறிக்கப்படுகின்றனர். தனி ஜாதியாக அல்ல. மக்களிடமிருந்து அவர்கள் பிறப்பு [தோற்றம்] வேறுபட்டது என்பதனைக் குறிக்கும் ஒரு சொல் கூட வேதங்களின் நேர்மையான பகுதிகளில் எந்த இடத்திலும் கூறப்படவில்லை. அவர்களின் மூலத்தோற்றம் [பிறப்பு] காரணமாக அவர்கள் எவ்விதச் சிறப்புச் சலுகைகளை, அல்லது உயர்தகுதிகளை அவர்கள் கேட்கவில்லை. உயிர்ப்பலி கொடுக்கும் நிகழ்வுகளிலும் பிற மதச் சடங்குகளிலும் ஏனைய அர்ச்சகர்களோடு [பூசாரிகளோடு] சேர்ந்து [புரோகிதம்] பூசாரித் தொழில் செய்பவராகவே பார்ப்பனர்கள் வேதங்களில் குறிப்பிடப்படு கிறார்கள். அவர்கள் வேதங்களில் இவ்வாறுதான் குறிப்பிடப்படுகிறார்கள்: வேதங்களை இசையோடு ஓதுவோர், சதக்ருது! [இந்திரன்] உன்னைப் புகழ்ந்து ஓதுகிறார்கள். ரிக்குகளை இசைப்போர், உன்னைப் போற்றிப் பாடுகிறார்கள். அவர்கள் போற்றுதலுக்குரியவர்கள்! ஒரு மூங்கில் கழியைப் போலப் பிராமணர்கள் உன்னை மிகமிக உயர்த்திப் புகழ்கிறார்கள். நீ அக்னி, ஃகோத்ரியின் அலுவலகமாக, போத்ரியின் இருப்பிடமாக, ரிட்விஜ் இடமாக, நெஷ்டிரியின் நிலையமாக நீ விளங்குகிறாய்! உன் பக்தர்களின் அக்னீதரனாக நீ விளங்குகிறாய்! பிரசாஸ்திரியின் இயக்கமாக நீ இருக்கிறாய்! நாங்கள் வாழும் இல்லத்தின் உரிமையாளனாகவும் நீ

திகழ்கிறாய்! இதில் எண்வகைப் பூசாரிகள் குறிக்கப்படு கின்றனர். இவர்களில் பிராமணன் கடைசியாக இடம் பெறுகிறான். மிகப் பெரிய சடங்கு நிகழ்வுகளில் பதினாறு வகைப் பூசாரிகள் இடம் பெறுகின்றனர் என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர்.

**வேதங்களின் மிகத் தொன்மை வாய்ந்த பகுதிகளுக்கு மிகப் பிற்பட்ட காலத்திலேயே பிரம்மா அல்லது பிராமணன் என்ற சொல், கடவுளின் முகத்தில் தோன்றிய அர்ச்சகன் [பூசாரி] என்ற தனிப் பொருளில் பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும். பிராமணன், தனது வேதியத் தொழிலிலிருந்து ஜாதிய உயர்நிலைக்கு எவ்வாறு மாறினான், எவ்வாறு வளர்ச்சி பெற்றான் என்பதைக் கண்டறிவது ஒன்றும் கடினமான பணி அல்ல; உயிர்ப்பலி கொடுத்து நடத்தப்பட்ட வேதகாலச் சடங்குகளில் அவனது சிறப்புக்குரிய தகுதி சடங்கு நடத்துநர் என்பதுதான். புரோகிதன் அல்லது வேலை செய்பவன் என்பதுதான் அதன் நேர் பொருளாகும்.** முதலில் இந்த மதிப்பினை [மற்றவர்களிடம்] மக்களிடமிருந்து பெற்றுக் கொண்டான்; பின்னர் விசுவா மித்திரனைப் போன்ற பலர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டனர். அக்னி நெருப்புக் கடவுள்; வானகத்துக் கடவுளர்க்கெல்லாம் அக்னியே புரோகிதன்; பிரம்மா அல்லது பிராமணனை அக்னியின் சார்பாளனாக [புரோகிதராக] இந்தப் பூவுலகில் அரசர்கள் வைத்துக்கொள்வது மிகவும் பெருமைக்குரியதாகக் கருதப்பட்டது. இந்தப் புரோகித முறை, பிரம்மா, [பிராமணன்] என்ற அமைப்புமுறை, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வருகிற அமைப்பு முறையாக மாறிவிட்டது. **பிராமணர்கள், பெரும் செல்வச் செழிப்புமிக்கவர்களின் இல்லங்களிலேயே தங்கி வாழ்ந்தனர். குறிப்பாக அரண்மனைகளில் அவர்கள் இடம் பிடித்துக்கொண்டு, அரசர்களைப் புனிதப் படுத்தும் செயல்களிலும், அவர்கள் குதிரைகளை உயிர்ப்பலி கொடுத்து நடத்திய வேள்விகளை, யாகங்களைப் புனிதப்படுத்தும் வேலைகளிலும் பிராமணர்கள் ஈடுபட்டு மிகுந்த செல்வாக்குப் பெற்றனர். அரசர்களின் வெற்றிக்காகவும் அவர்தம் கால்வழி மரபு நன்கு செழித்தோங்கவும் பிராமணர்கள் யாகங்கள் நடத்திப் பெருஞ்செல்வத்தைச் சுரண்டிக் கொண்டார்கள்; பிராமணரின் படிப்பும், கல்வியும் அவர்களுக்குப் படிப் படியாக மிகுந்த செல்வாக்கைப் பெற்றுக் கொடுத்தன. இது தொடர்ந்து வளர்ச்சியடைந்து கொண்டே வந்தது. அரசருக்கு அறிவுரை கூறுபவர்களாக இவர்கள் நியமிக்கப்பட்டார்கள். கடவுளரோடு இவர்கள் பெற்றிருந்ததாகக் கூறப்பட்ட சிறப்பான தொடர்பு இவர்களுக்குத் தனியானதொரு புனிதத் தன்மையைக் கொடுத்தது;**

**பிராமணன் ஆட்சி செலுத்தும் நிலைக்கு உயர்ந்தான். இந்தத் தகுதியோடு பிராமணன், இந்த நிலவுலகில் ஒரு கடவுளாகத் தன்னை மாற்றிக் கொண்டான். பூதேவர்களாகப் பிராமணர்கள் தங்களைத் தாங்களே உயர்த்திக் கொண்டார்கள்.** இத்தகைய உயர்வு, அதாவது கடவுள் நிலைக்கு ஒரு மனிதன் தன்னை உயர்த்திக் கொண்ட உயர்வு, அல்லது கடவுளுக்கும் மக்களுக்கும் இடைத்தரகு வேலை பார்க்கும் உயர்ந்தோனாக ஏற்படுத்திக் கொண்ட உயர்வு, வேறு சில நாடுகளிலும் நடைபெற்றிருக்கிறது.

(2) வேதங்களின் ஆசிரியர்களாகக் கூறப்படுவோர் ரிஷிகள் என்று பெயரிடப்பட்டு அழைக்கப்பட்டனர். இவர்களே ஆரியச் சமூகத்தில் மதவழிப்பட்ட நோக்கில் மிக உயர்ந்தோராகக் கருதப்பட்டனர்; இதில் எள்ளளவும் அய்ய மில்லை. பிராமணர்கள் வகித்த உயர்பதவி, செய்த தொழில் ஆகியவற்றைப் பெரிதெனக் கருதிய மக்கள் இவர்களைத் தங்களின் ஆதாரமாகவும், உயர்வுக்கு உதவுபவராகவும் கருதிப் போற்றினர். பிராமணர்கள் பார்த்துவந்த இத்தொழில்கள் பரம்பரையாக வந்தபோதிலும், இந்திய மக்களிடையே அவர்கள் ஒரு வகுப்பாராக மட்டும் இருக்கவில்லை. மக்கள் சமுதாயத்தில் இவர்கள் அரச வகுப்பினராகவும், புரோகித வகுப்பினராகவும் இருந்து வந்தனர்.

வேதங்களில் பல்வேறு இசைப் பாடல்களை இயற்றியவர் என்று கூறப்படுகின்ற விசுவாமித்திரர், விஷ்ணு புராணத்தில் குறிப்பிடுவதைப் போல மிக இன்றியமையாத பழங்கதை மரபு சார்ந்த ஏழு ரிஷிகளில் ஒருவர்; இந்து மதவாதிகளால் ராஜரிஷி என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட விசுவாமித்திரர், அரசர்களில் அவர் ஒரு ரிஷியாக விளங்கியவர்; பிரம்மரிஷி என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டவர்; அல்லது பிராமணன், அதாவது ரிஷிகளின் தரவரிசையில் முதன்மையாக இடம்பெறுபவர், அவருடைய திறமைகளுக்காகவும் கூர்த்த மதி நோக்கிற்காகவும் அவர் இவ்வாறு போற்றப்பட்டார். (இந்து மதத்தில் விசு வாமித்திரர் குறிப்பிடத்தக்கவராகக் கருதப்படுகிறார். வரலாற்றியல் பவுராணிக ஆசிரியர்களால் விசுவாமித்திரர் சத்திரிய குலத்தைச் சேர்ந்தவர் என்று குறிப்பிடப்படுகிறார். அதாவது அரசர், போர்வீரர் வகுப்பைச் சேர்ந்தவர்; சிறிது காலம் அவர் முடிமன்னராகவும் இருந்தவர். சூரிய குலத்தைச் சேர்ந்த குஷா வகுப்பினர்; பல அரசர்களின், முனிவர்களின் முன்னோராக விசுவாமித்திரர் விளங்குகிறார். அவருடைய தவ வலிமையின் ஆற்றலால், விசுவாமித்திரர் பிரம்மாவை வற்புறுத்தித் தன்னைப் பிராமண வகுப்பு வரிசையில் சேர்க்கும்படி செய்தார்.

வசிஷ்டருக்கு நிகராகத் தன்னை வைக்கும்படி செய்தவர்; வசிஷ்டரோடு பலமுறை வாதப் போர் புரிந்தவர் விசுவாமித்திரர்.]

வேதங்களில் குறிப்பிடப்படுகின்ற ஜமதக்னியும் ஒரு ரிஷியாவார். இவர் பிற்காலத்து இந்துப் புராணக் கதை மரபில் அவதாரா பரசுராமனின் தந்தை என்று கூறப்படுகிறார். மேலும் விசுவாமித்திரரின் மருமகனாகவும் இவர் விளங்குகிறார். விசுவாமித்திர, ஜமதக்னி ஆகிய இருவரிடமிருந்தும் ரத்தக் கலப்புடைய பல்வேறு பிராமணப் பழங்குடியினர் தோன்றினர் என்று பழங்கதை மரபு கூறுகின்றது. வேதங்களின் பல்வேறு இசைப்பாடல்கள் அரச மரபினரால் அல்லது இவர்களிலிருந்து உயர்ந்தோராக்கப்பட்ட புரோகித வகுப்பினரால் இயற்றப்பட்டவையாகும்.

(3) **ரிஷிகளும், புரோகிதர்களும் சமுதாயத்தின் பல்வேறு வகுப்புகளைச் சேர்ந்த பெண்களைத் திருமணம் செய்து கொண்டனர். இப்போது உள்ள பிராமணர் களுக்கு இந்த உண்மை நன்கு தெரியும்.** ஆனால், பிற்காலத்திய அவர்களது சாஸ்திரங்களுக்கு நன்மதிப்புக் கொடுக்கும் வகையில் அவர்கள் இத்தகைய திருமணங்கள் அவர்களது தனிச் சிறப்புரிமை என்று கூறி வருகின்றனர். அதாவது அவர்கள் பிராமண வகுப்பில் ஏற்கனவே ஒரு பெண் ணைத் திருமணம் செய்து கொண்ட பின்னர், அதற்குமேலும் உயர்வகுப்பைச் சேர்ந்த ஒவ்வொரு வகுப்பிலும் ஒரு பெண்ணை அவர்கள் திருமணம் செய்து கொள்வது அவர்களது தனிச்சிறப்புரிமை என்று நிலைநாட்டினர். ஆனால், கீழ்க்காணும் கதையைப் பற்றி அவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள்?

ரிக் வேதத்தின் பல சூத்திரங்களின் ஆசிரியராகிய நிதி மஞ்சாரியின் தாயான உஷிக் என்பவள், அங்கா என்னும் அரசனின் அடிமை பெற்ற புகழ்பெற்ற மகள் ஆவாள்! காக்ஷிவாட்(நிதி மஞ்சாரி), தன் படிப்பை முடித்துக் கொண்டு, தன் ஆசிரியரிடம் விடைபெற்றுக் கொண்டு வீட்டை நோக்கிப் பயணமானான்; இரவு நேரம் ஆகிவிட்டதனால், சாலை ஓரமாகப் படுத்து உறங்கினான். காலையில், சானயா எனும் அரசன் (இவன் பாவயாவ்யா என்பவனின் மகன்) தன் பரிவாரங்களுடன் அந்த இடத்திற்கு வந்தவன், அந்தப் பிராமணனின் அயர்ந்த உறக்கத்தைக் கலைத்து அவனை எழுப்பினான். அந்த அரசன் மிகுந்த மகிழ்ச்சியுடன் அவனைக் கைதட்டி அருகில் வருமாறு அழைத்தான். அந்தப் பிராமணனின் தனித் தோற்றத்தைக் கண்டு அரசன் வியப்பில் ஆழ்ந்தவனாய், அவன் தகுதிமிக்க நற்குடியில் பிறந்தவனாக இருந்தால் அவனுக்குத் தன்னுடைய பத்துப் பெண் பிள்ளைகளையும் திருமணம் செய்து கொடுத்து விடுவதென்று

முடிவுசெய்தான். அவனது தகுதியை உறுதிப்படுத்திக் கொண்ட பின்னர், காக்ஷிவாட் எனும் அந்தப் பிராமணனைத் தனது அரண்மனைக்கு அழைத்துச் சென்றான். பின்னர் தன் பத்து மகள்களையும் அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அதேநேரத்தில் அந்தப் பிராமணனுக்கு ஏராளமான பொன்னையும், நூறு குதிரைகளையும், நூறு காளைகளையும், ஆயிரத்து அறுபது பசுமாடு களையும், பதினொரு தேர்களையும் [ஒவ்வொருவருக்கும் ஒரு தேர்] ஒவ்வொரு தேரையும் இழுப்பதற்கு நான்கு குதிரைகள் எனக் கணக்கிட்டு 44 குதிரைகளையும் அவனுக்குப் பரிசளித்தான். காக்ஷிவாட், வேதத்தில், தன் மாமனாரின் பெருந்தன்மை மிக்க கொடைக் குணத்தை இவ்வாறு மகிழ்வுடன் கொண்டாடு கிறான்:- பெருந்தன்மை வாய்ந்த எந்த அரசர் என்னை அழைத்தாரோ அந்த அரசரிடமிருந்து காக்ஷிவாட் ஆகிய நான், தயக்கமின்றி அவர் அளித்த அளவற்ற பொற்காசுகளையும் நுற்றுக்கணக்கான போர்க் குதிரைகளையும், காளைகளையும் ஏற்றுக் கொண்டேன். இதன் வாயிலாக அந்த அரசன் தனது அழியாப் புகழை வானுலகமெல்லாம் பரவுமாறு செய்துவிட்டான்!

இவ்வாறு அந்தப் பார்ப்பானுக்குக் கொடுக்கப்பட்ட பரிசுப் பொருள்கள் மிகைப்படுத்திக் கூறப்பட்டவையல்ல; இன்னும் நிறையக் கொடுத்திருக்கிறார்கள் நாடாண்ட மன்னர்கள்! இதற்குப் பின்வந்த மன்னர்களும் இதே வேலையைச் செய்திருக்கிறார்கள்! பரதன் என்ற அரசன், அவனுடைய பட்டமளிப்பு விழாவின் போது, ஏழாயிரத்து நூறு கோடிக் கருப்பு யானைகளைப் பிராமணர்களுக்கு வழங்கியுள்ளான். இந்த யானைகளின் வெண்ணிறத் தந்தங்களுக்குப் பொற்கவசம் அணிவித்துக் கொடுத்திருக்கிறான். ஆயிரக்கணக்கான பார்ப்பனர்களுக்கு லட்சக்கணக்கிலான பசு மாடுகளைப் பரிசளித்தான் பரதன்! சொர்க்கத்தில் இருக்கும் கடவுளரைவிடப் பார்ப்பனர் நன்முறையில் வாழ்ந்தனர். அசுவமேத யாகத்திற்காக யமுனை ஆற்றின் கரையில் 78 குதிரைகளை பார்ப்பனர் எரித்துக் கொன்றனர்; கங்கைக்கரையில் 55 குதிரைகளை எரித்தார்கள். **இராமாயணத்தின் படி, தசரதன் - தான் நடத்திய அசுவமேத யாகத்தின்போது, பார்ப்பனர்க்கு இந்தப் பூவுலகம் முழுவதையும் அன்பளிப்பாகக் கொடுத்தான். இந்தப் பூவுலகத்தைத் தங்களால் பாதுகாக்க முடியாது என்று அதனை மறுத்த பார்ப்பனர்கள், அதற்கு ஈடாக நூறாயிரம் பசுக்களையும் நூறு கோடிப் பொற்காசு களையும் 40 கோடி வெள்ளிக் காசுகளையும் பெற்றுக் கொண்டனர்.**

இப்போது மீண்டும் காக்ஷித் சொல்வதை நாம் கேட்போம்: போர்க் குதிரைகள் பூட்டிய பத்துத் தேர்களிலும் என் பத்து மனைவியரும் அமர்ந்திருக்க அவை என் அருகில் வந்து நின்றன; எங்களைப் பின் தொடர்ந்து ஆயிரத்து அறுபது பசு மாடுகளும் வந்தன. நாற்பது குதிரைகள் தேர்களை இழுத்து வர ஆயிரக் கணக்கானோர் பின் தொடர்ந்து வர ஊர்வலம் புறப்பட்டது. பஜ்ராஸ் என்னும், காக்சிவாட்டின் உறவினர் குதிரைகளைத் தடவிக் கொடுத்துப் பொன்னாடைகளை அவற்றிற்கு அணிவித்தான்.

காக்ஷிவாட் தன் சொந்த [பார்ப்பன] வகுப்பில் எந்தப் பெண்ணையும் மணந்து கொள்ளவில்லை என்று தெரிகின்றது. அந்த அரசனிடமிருந்து பெற்றுக்கொண்ட பெண்களே அவனுடைய தேவைக்கு அதிகமாக இருந்தார்கள்!

**ரிஷிகளும் புரோகிதர்களும் அரச குடும்பத்துப் பெண்களை மணந்து கொண்ட நிகழ்வுகள் அடிக்கடி குறிப்பிடப்படுகின்றன. [சியாவணா சுகன் யாவையும் ஜமதக்கினி ரேணுகாவையும் மணந்து கொண்டனர்.]**

[4] சட்டப் புத்தகங்களிலும் சாஸ்திரங்களிலும் குறிப்பிடப்படுகின்ற சத்திரியா என்ற சொல் இந்து சமுதாயத்தில் இரண்டாம் படிநிலையில் உள்ள போர் வீரர் களை [வகுப்பை]க் குறிப்பதாகும். இது வேதங்களில் வலிமை வாய்ந்தவர் களைக் குறிப்பதற்கு வழங்கப்படுகின்ற பட்டப் பெயர் என்ற பொருளில் வருகின்றது. அதாவது யார் வலிமை பெற்றிருக்கிறார்களோ அவர்கள் சத்திரியர்கள் ஆவர். இந்தப் பொருளிலேயே இந்தச் சொல் வருணன், இந்திரன் முதலான கடவுளரைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. வேதங்களில் செத்ரோபதி என்ற சொல் [வயல்களின் உரிமையாளன்] நில உரிமையாளருக் குரிய பெயராகக் குறிக்கப்படுகின்றது; சத்ரபதி என்ற பெயர் அதிகாரத்தைப் பெற்றுள்ளவன் என்று பொருள்படும்; இவன் தன் அதிகாரத்தை எதன் மீதும் – எவர் மீதும் எந்த அளவும் செலுத்தக் கூடியவன். சத்திரியா என்ற சொல் சத்ரபதி என்ற சொல்லுக்கு இணையானதாகும். சத்ர என்ற சொல் பேரா. லேசன் குறிப்பிடுவதைப் போல செந்த் மொழியிலுள்ள ஷத்ரா [இது கட்டற்ற வல்லாட்சி என்றும் பொருள் தரும்] கிரேக்க மொழியிலுள்ள சதாரக் என்ற சொல்லுடன் பொருந்துவதாகும். இவற்றின் வேர்ச்சொற்பொருளை நோக்கினால் இவை அனைத்தும் உடல் வலிமையைக் குறித்து நிற்கின்றன என்பது விளங்கும். சத்திரியா என்ற சொல் விஷாஸ்பதி அல்லது விஷாம்பதி என்றும் பொருள்படும். ஓர் ஊரின் அல்லது மக்களின்

தலைவன் என்று இச்சொற்கள் பொருள்படும்; ராஜ் என்பது லத்தீன் மொழிச் சொல்லாகிய ரெக்ஸ் [அரசன்] என்பதற்கு இணையானது; ராஜன்யா என்பது [இளவரசன்] ராஜ் என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டது. **ஆரிய அரசர்களும் ஆரிய இனத்தின் தலைவர்களும் ரிஷிகளால் வேதங்களில் அடிக்கடி புகழ்ந்துரைக்கப் படுகிறார்கள். ஆனால், இவர்கள் தெய்வீக ஆற்றலால் கடவுளின் நெற்றியில் தோன்றியவர்கள் என்று எந்த இடத்திலும் கூறப்பட வில்லை; இதைப் பற்றி ஒரு சொல்லைக் கூடக் காண முடியவில்லை.**

**பேராசிரியர் வில்சனும் மற்றவர்களும் குறிப்பிடுவதைப் போல, அக்காலத்து அரசர்கள் சடங்கு முறைகளுக்கு எதிராகத் தங்கள் உணர்ச்சி களை வெளிப்படுத்திக் காட்டி அவற்றைப் புறக்கணித்து இருக்கிறார்கள் என்பதற்கு வேதங்களிலேயே பல குறிப்புக்கள் இருக்கின்றன. ஆதலின் பார்ப்பனரைப் போர்வீரர் பட்டியலில் சேர்ப்பதற்கும் எதிர்ப்பு இருந்துள்ளது என்பது மாபெரும் உண்மையாகும்.** மகாபாரதத்தில் அரச மரபினரான குருமரபினரும் பாஞ்சாலரும் தங்களின் அரசவைக் கூட்டத்தின் செயற்பாடு களுக்குப் பார்ப்பனரின் அறிவுரையைக் கேட்காமலேயே சென்றார்கள் என்று குறிப்பிடப்படுகிறது. மனுவின் சட்ட நூற்படி அரசர்கள், பார்ப்பனரின் அறிவுரையைக் கேட்டுக்கொண்டுதான் தங்களின் அன்றாட அலுவல்களைத் தொடங்க வேண்டும். இது அரச மரபினருக்குக் கட்டாயம் தேவையான ஒன்றாகும்.

[5]வேத காலத்தில் விஷா என்பது பொதுவாக மக்கள் என்ற பொருளு டையதாய் விளங்கியது. இது வெஷா [வீடு] என்பதனோடு தொடர்புடையது. இதன் பெயரடையாகிய வைஷியா [Vaishya ] என்பது பின்னாளில் வீட்டு உரிமை யாளரைக் குறித்து நின்றது; அல்லது பொதுமக்களில் ஒரு தனி மனிதனைக் குறிப்பதாக இருந்தது. விகஸ் என்னும் லத்தீன் மொழிச் சொல்லும் விகாக் என்னும் கிரேக்கச் சொல்லும் வெஷா [Vesha ] என்பதற்கு இணையான தொடர்புச் சொற்களாகும். [டாக்டர் முல்லர், விஷா எனும் இந்தச் சொல்வழக்கு மேலைநாடுகளின் ஊர்ப்பெயர்களோடு ஒட்டி வருவதைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்; Greenwich Woolwich ] விஷா என்பது சில நேரங்களில், சமுதாயத்தில் நிலவிய நாட்டுப்புற, வேளாண் தொழில்சார்ந்த, ஏனைய தொழில்சார்ந்த வகுப்பினரைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டிருந்தாலும் அது அவர்கள் செய்துவந்த தேவைக்கேற்ற சிறுசிறு தொழில்களைக் குறிப்பதையே நாம் பொருளாக எடுத்துக்கொள்ள வேண்டும். ஆனால், இந்தத் தொழில்களில் அவர்களுக்கு ஏகபோகத் தனிஉரிமை தரப்படவில்லை. ரிக் வேதத்தில்

அஷ்வினை நோக்கி உரைக்கப்படும் உரைகளில் அந்தச் சமுதாயத்தின் பொதுவான விருப்பங்களையும், வழிபடுவோரின் விருப்பங்களையும் அல்லது உயிர்ப்பலி கொடுத்து அந்த வேள்வியைச் செய்வோரின் விருப்பங்களையும் நாம் காண முடிகிறது. பிரம்மாவை அன்புடன் ஆதரிக்க வேண்டுகிறோம்; இந்த யாகத்தினை அன்புடன் ஆதரிக்க வேண்டுகிறோம்; அரக்கர்களைக் கொன்றொழிக்க வேண்டுகிறோம்; தீமைகளை வெளியேற்றுக; கத்ராவை [ஆற்றலை]ஆதரிக்க வேண்டுகிறோம்; மனித ஆற்றலை ஆதரிக்குமாறு வேண்டுகிறோம்; பசுவை [தேனு - சொத்துக்களைக் குறிப்பது காமதேனு] ஆதரிக்க வேண்டுகிறோம்; மக்களை [அல்லது இல்லத்தை விஷா] ஆதரிக்க வேண்டு கிறோம். இங்கு பொதுவான விருப்பங்கள் என்று குறிப்பிடப்பட்டவை பிற்காலத்தில் குறிப்பிட்ட ஜாதிகளுக்குச் சொந்தமானவையாக மாற்றப்பட்டு விட்டன.

[ரிக் வேதத்தில் வரும் இந்தப் பகுதி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பிற்காலத்தில் இந்தப் பகுதியில் வரும் பல சொற்கள் உருமாற்றம் செய்யப்பட்டும், தனித் தனியாகப் பிரிக்கப்பட்டும், சேர்க்கப்பட்டும் காணப்படுகின்றன. சாயன ஆச்சாரி, ஜாதிய உணர்வுடன் வழிபாடு - பிரம்மா என்பதை பிராமணன் என்றும், அதாவது வழிபடுகிறவன், சத்ரா [ஆற்றல்] என்பதை சத்திரியர் அதாவது அந்த அதிகார ஆற்றலைச் செயற்படுத்துகிறவன் என்றும், தேனு [பசுவையும்] விஷா [மக்கள்] வையும், வைசியர்கள் என்றும், இந்த வேள்விச்செயல் மக்களுக்குரியது என்றும், உரை எழுதியிருக்கிறார். இந்த விளக்கம் வியப்பிற்குரியதல்ல. **[ஏனெனில் இதனை எழுதியவர் சாயன ஆச்சாரி] ஆனால், இது மிக மிகத் தவறானதாகும். இவை மக்களின் விருப்பங்களையும், வேண்டுதல்களையும் குறித்தனவே யன்றி ஜாதிகளைக் குறிக்கவில்லை.]** வந்தேறிகளின் இன ஒற்றுமை தொடர்ந்தது; நாம் அடிக்கடி குறிப்பிடும் ஆரியர் என்ற பெயரால் அவர்களின் மூதாதையர் வழிப் பெயரால் அவர்கள் குறிக்கப்பட்டனர். மகாபாரதத்தின்படி, பாண்டவர் காலத்தில் வைசியர்கள் அரசின் நடவடிக்கைகளில் கணிசமான செல்வாக்குப் பெற்றிருந் தனர். அறிவுசான்ற விதுர், யது ஆகியோரின் செயற்பாடுகள் இதற்கு எடுத்துக்காட்டாகும். இஃஃதோர் அளவிலேயே இருந்தது; **இந்தியாவின் செழிப்பு மிகுந்த சமவெளிப் பகுதிகளில் ஆரியர்கள் குடியேறிய பிறகு வைசியர்களுக்கு ஆடுகள், மாடுகள் முதலான கால்நடை மந்தை களையும், வேளாண்மையையும் கவனிக்கும் சிறப்புக்குரிய பொறுப்புக் கொடுக்கப்பட்டது. இத்துடன் வாணிகம் செய்யும் உரிமையும் அவர்களுக்கு ஒதுக்கப்பட்டது. இவை யாவும் மனுவின் பெயரால் நடைபெற்றன.** நாம்

ஏற்கனவே பார்த்ததைப் போல, பசு மாடுகளைப் பாதுகாத்து வைத்திருப்பவன் அந்தச் சமுதாயத்தின் தலைவனாக இருந்து வந்த காலம் அது!

**(6) மனுவும் இந்துச் சட்டமும், சூத்திரர்களை இந்தியச் சமூகத்தின் ஓர் அங்கம் என்று பொதுவாகக் குறிப்பிட்டபோதிலும் அவர்கள் அடிமைப் படுத்தப்பட்டவர் களே; இரண்டாம் பிறப்புக்கு (இரு பிறப்பாளர்) அல்லது புனிதமான பிறப்புக்கு அவர்கள் உரிமையுடையோர் அல்லர்! இப்படிப்பட்ட இவர்களைப் பற்றிப் பழைய வேதங்களில் எந்தக் குறிப்பும் இல்லை. ஒரு இடத்தில்கூட இவர்கள் குறிப்பிடப் படவில்லை! இவர்கள் முதன்முதலாக, மகாபாரதத்தில்தான், அபிராஸ் என்பவர்களுடன் இண்டஸ் ஆற்றின் கரையில் வசித்து வந்தார்கள் என்று கூறப்படுகிறது என்பது நம் கவனத்திற் குரியதாகும்.** இந்த அபிராஸ் என்பவர்களை இதே நிலையில் தாலமியும் குறிப்பிடுகிறார். இவர்கள் வாழ்ந்த மாவட்டத்திற்கும் அபிரியா என்று பெயரிடப் பட்டிருக்கிறது. இவர்களின் வழிமரபினர் இன்றும் சிந்து கட்ச், கத்தியவாட் பகுதிகளில் இடையர்களாகவும், உழவர்களாகவும் காணப்படு கின்றனர். இந்தப் பகுதிகளிலும் இவற்றை அடுத்துள்ள பகுதிகளிலும் சூத்திரர் களைப் பற்றிய மிகத் தெளிவான சிறப்புமிக்க அறிகுறிகள் – குறிப்புகள் இருக்கின்றன. தொன்மைமிக்க வரலாற்றுக் காலத்தில், இண்டஸ் ஆற்றின் கீழ்ப்பகுதியில் இருந்த நகரத்தில் இவர்களின் பெயர் மறுபடியும் காணக் கிடைக்கின்றது என்று பேரா. லேசன் கூறுகிறார். இவ்வாறாக இவர்கள் (சூத்திரர்கள்) ஒரு தனித்த நாட்டினராக இண்டஸ் ஆற்றின் அணிமைப் பகுதிகளில் வாழ்ந்தனர் என்பது நிறுவப்படு கின்றது. அதாவது இதை இப்படிச் சொல்லலாம், பழங்காலத்தில் ஆரிய இந்தியர்கள் எந்தப் பகுதியில் வசித்து வந்தார்களோ அந்தப் பகுதியில்! ஆரியர்கள் தொன்மைக் குடிமக்களான இந்த மண்ணின் மைந்தர்களை வெற்றி கொண்டிருக்கலாம். இந்தச் சூழ்நிலையிலிருந்து ஒன்று தெளிவாகத் தெரிகின்றது; நாட்டின் உட்பகுதியில் வாழ்ந்து வந்த இந்த மண்ணின் தொன்முது குடிமக்களை ஆரியர் வெற்றிகொண்ட பின்னர் சூத்திரா என்ற பெயர், பிறரைச் சார்ந்து அடிமை ஊழியம் செய்துவந்த ஜாதி மக்கள் அனைவருக்கும் சூட்டப்பெற்றது. இந்தப் பெயர் சமஸ்கிருதத்திலிருந்து பெறப்பட்டிருக்க முடியாது.

இதனுடைய சரியான உச்சரிப்பு – எழுத்து SUDRA என்றுதான் இருக்க வேண்டும் என்று துணிவதற்கு இடம் இருக்கிறது. இது சரியாக இருக்குமானால், பழைய பெர்சிய மொழியில் இது ஃஃகூத்ரா (HUDRA ) என்று ஒலிக்கப்பட வேண்டும். இது மெகஸ்தனீசின் கருத்தால்

உறுதிப்படுத்தப்படுகிறது; அதாவது இந்திய நாடுகள், அலெக்சாண்டரின் காலத்திற்கு முன்பாக பெர்சியன்களுக்குத் துணைப் படையினரை அனுப்பியுள்ளன. இந்த நாட்டில் ஆரியர்களால் வென்று அடிமைப்படுத்தப்பட்ட மக்களுக்கும், பிறரைச் சார்ந்து அடிமை ஊழியஞ்செய்து வந்த மக்களுக்கும் சூத்திரன் என்ற பெயர் நீட்டித்து வைக்கப்பட்டு அவர்கள் சூத்திரர் ஆக்கப்பட்ட பின்னர், மிக எளிதாகவும், மகிழ்வுடனும் வெறுக்கப்பட்ட பழங்குடியினரான சண்டாளர்களுக்கும், அம்பஸ்தாஸ் மக்களுக்கும் பிறருக்கும் சூத்திரப் பட்டம் படிப்படியாகச் சூட்டப்பட்டது. நாட்டின் உட்பகுதியில் இருந்த சூத்திரர்களில் சிலரும் பழங்குடி மக்களில் சிலரும்ஆரியர்களின் மொழியோடு ஒத்திருக்கும் ஒருவகைக் கிளைமொழியைப் பேசிவந்தனர் என்று ஆய்வாளர் சிலர் கூறுகின்றனர்; நானும் அவ்வாறே கருதுகிறேன். இக்கிளை மொழியானது ஆரியர்களுக்கு முற்பட்ட வந்தேறிகளின் மொழியோடு தொடர்புடையதாயிருக் கலாம் என்று கருதுகிறேன். [தஸ்யூ எனப்படுகின்ற தாசர்களின் பல பெயர்களும், ஆரியர்களின் மற்ற எதிரிகளின் பெயர்களும் ஆரியப் பொருள் உடையனவாகவே உள்ளன. வடஇந்திய மொழிக் குடும்பத்தில் இன்றும் வழக்கில் உள்ள பல சொற்கள், சமஸ்கிருத மொழியோடு இன உறவுடையனவாகத் தோன்றுகின்றன. அவை சமஸ்கிருத மொழியோடு ரத்த உறவுடையன; அம் மொழியிலிருந்து அவை உடனடியாகப் பெறப்பட்டவை அல்ல. இந்தக் குறிப்பு அந்த நம்பிக்கையை எதிர்ப்பதற்காகக் கூறப்படுவதல்ல; இந்திய மொழிகளின் நிலை இந்தக் கருத்தினை உறுதிப்படுத்துகின்றது. ஆரியர் வருகைக்கு முன்பாக இந்தியா விற்குள் நுழைந்த பழங்குடியினர் பலரும் சித்தியன் அல்லது துரேனியன் இனவழிப்பட்டவர்களாக இருக்க வேண்டும்.]

சூத்திரர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய உண்மையான மத உரிமைகளைப் பற்றி ஆரியச் சமூகம் பெரிதும் அக்கறை காட்டவில்லை. ஒரு தயக்கம் அவர்களைப் பற்றிக் கொண்டிருந்தது. **வேதங்களைக் கற்றறிந்த பிராமணர் களின் காலத்தில் ஆரியர் நடத்திய யாகங்களில் [வேள்விகளில்] பங்கெடுத்துக் கொள்வதற்கு அவர்கள் [சூத்திரர்கள்] அனுமதிக்கப்பட்டார்கள்.** ஆரியர்களின் வெற்றி தொடர்ந்து நீடித்துக் கொண்டு வந்தபோது, ஆரியர்கள் கங்கை, யமுனை ஆகிய ஆறுகளின் கிளையாறுகள் பாய்ந்த சமவெளிப் பகுதிகளில் நிலையானதோர் ஒழுங்குபட்ட சமுதாய அமைப்பை அவர்கள் ஏற்படுத்திக் கொண்டார்கள். இக்காலத்தில் சூத்திரர்களைத் தாழ்ந்த நிலைக்குத் தள்ளித் துன்புறுத்தி ஆரியர்கள் கீழ்மைப்படுத்தினார்கள். மனு தருமத்தில் கூறப்பட்டுள்ள

சட்டங்களின்படி சூத்திரர்கள் இழிவாகவே நடத்தப்பட்டார்கள்; மனு கூறுவதாவது ஒரு பிராமணன் சூத்திரனுக்கு அறிவுரை தரக் கூடாது; பிராமணன் சாப்பிட்ட எச்சத்தைக் கூடச் சூத்திரனுக்குத் தரக் கூடாது; நெய்யோ, வெண்ணெய்யோ எதுவும் அவனுக்குத் தரக் கூடாது. ஆன்மீக அறிவுரை தரக் கூடாது. சூத்திரன் செய்த பாவங்களுக்குப் பரிகாரம் எதனையும் சொல்லக் கூடாது. அடிமைத் தொழில் செய்யும் சூத்திரனுக்குப் பாவம் போக்கும் பரிகாரச் சட்டவிதிகளை அவனுக்குச் சொல்பவனும், அவற்றைச் செய்யும் முறைகளை அவனுக்குச் சொல்லித் தருபவனும் சூத்திரனோடு சேர்ந்து அசம்விருதா என்னும் நரகத்தில் மூழ்குவான் [மனு:8:417]

**இவ்வாறு இந்தியச் சமுதாயத்தில் கீழ்நிலையில் உள்ள மக்களை இழித்தும் பழித்தும் தாழ்த்தும் செயல்கள் ஆதி வேதங்களில் எந்த இடத்திலும் இடம்பெற வில்லை. ஏற்கனவே கூறியதைப் போல, சூத்திரர் இருந்தனர் என்ற கருத்தை ஒருமுறைகூட எந்த இடத்திலும் மறைமுகமாகக் கூடக் கூறவில்லை.**

**[7.] வேதங்களின் காலத்தில், பிரம்மா என்ற கடவுளைப் பற்றிய கருத்தோ, அவருடைய முகம், தோள், தொடை, கால் முதலான இடங்களிலிருந்து இந்துக் களின் நான்கு முதன்மையான ஜாதிகள் தோன்றி வளர்ந்தன என்னும் கருத்தோ இல்லை! இந்தக் கருத்தியலே அப்போது உருவாகவில்லை.**

**இந்துக்களின் மூன்று கடவுளரில் ஒருவராகிய பிரம்மா மனித இனத்தை ஈன்றெடுத்த பெற்றோராகிய பிரமா, வேதங்களில் எந்த இடத்திலும் ஒரு கடவுளாகக் குறிப்பிடப்படவே இல்லை!**

**பிரம்மா என்பது வேத மொழியில் ஆண் பெண் பால் வேறுபாடு காட்டாத பெயர்ச் சொல்லாகும். வழிபாடு என்பது இதன் பொருளாகும்.**

பிரம்மா ஆண்பால் பொருளில் வழிபாடு செய்கிறவன் என்று வருகிறது. நெருப்பு, வேள்வி இவற்றின் கடவுளாகிய அக்னி; நெருப்பு, வேள்வி இவற்றின் வழிபாட்டு முறைக்கு பிரம்மா என்று பெயர். விருகஸ்பதி, பிரிகஸ்பதி அல்லது பிரமணாஸ்பதி ஆகியவை ரிக் வேதம் முழுமையிலும் வழிபடு முறையின் தலைவனாகவே கூறப்படுகின்றன. டாக்டர் ரோத் எனும் அறிஞர், இந்த பதி கடவுளர் அனைவருமே ஏதோ ஒன்றின் எதிரொளி [பிரதிபலிப்பு] என்றும், பிற்காலத்திய கண்டுபிடிப்பு இது என்றும் முடிவு செய்கிறார். அவர் விஷ்பதி, விஷாம்பதி, மானசாஸ்பதி

என்று அழைக்கப்பட்டாலும் அவர் மனிதர்களின் தலைவர்; வைஷ்வனாரா என்பது அனைத்துயிரினங்களின் முடிமன்னன்; ஜாதவேதாஸ், வேதாஸ் சாஸ்வதா இவை மனிதர்களைக் காவல் புரியும், நிலையான காவல் ஆய்வாளர்; இவர் மனிதர்களின் சமூக வாழ்க்கையிலும், தனி வாழ்க்கையிலும் உதவியாகப் பயன்படுபவர்; தொடர்ந்து வேள்வியில் பலியிடப்படும் பொருள்களை நுகர்வோர் இவரே; சொர்க்கத்தின் மகன் என்றும் இப்பூவுலகின் மகன் என்றும் இவர் பேசப்படுகிறார். இவற்றின் பெற்றோராகவும் இவர் குறிப்பிடப்படுகிறார்; ஒன்றிலிருந்து வருவிக்கப்பட்ட கடவுளாகவும் படைப்பாளராகவும் குறிப்பிடப்படுகிறார். தொன்மையுடைய சுக்தாக்கள் இயற்றப்பட்டபோது இவ்வாறு நிலைமை இருந்தது. பருப்பொருளாக விளங்கு கின்ற இயற்கை, ஆற்றல் ஆகிய கடவுளருக்கு அப்பால், வழிபடுவதற்கென்றே ஒரு தனிக் கடவுள் தேவை என்ற விருப்பம், வேதங்களில் கூறப்படும் தொன்மைத் தெய்வங்களாகிய இவர்களுக்கு அப்பால் வழிபடு கடவுள் ஒருவர் தேவை என்ற விருப்பம், வெளிப்படையாக வேதங்களின் எழுத்துக்களில் தோன்றத் தொடங்கின. பிரம்மா என்னும் செயற்பாட்டால் அக்னி – இந்தக் கடவுளாகத் தேர்வு செய்யப்பட்டான்.

பிராமணர்கள், முடிவில் பிரம்மாவை நுண்பொருள் வடிவிலான தனிக் கடவுளாக ஏற்றுக்கொண்டு பொது மக்களிடையே பிரம்மாவை அறிமுகப் படுத்தி விட்டார்கள். **ஆனால், பிராமணர்கள் எவ்வளவுதான் பிரம்மாவைப் பெரிதுபடுத்திச் சிந்தித்து மக்களிடையே புழக்கத்தில் விட்டபோதிலும், இந்திய மக்களிடையே பிரம்மா வழிபாட்டை நிலைநிறுத்துவதில் அவர் களால் வெற்றி பெற முடியவில்லை. இந்தியாவில் பிரம்மாவுக்கென்று ஒரேஒரு கோயில்தான் உருவாக்கப்பட்டிருக்கிறதென்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.** இவ்வாறு பிரம்மா பொதுமக்களால் வெறுக்கப்பட்டமைக்கு ஒரு காரணம் உண்டு; பிரம்மாவின் ஒழுக்கக் கேடான நடத்தைக்காக சிவன், பிரம்மாவின் ஒரு தலையை வெட்டியெறிந்து விட்டு அவனுக்குச் சாபம் கொடுத்துவிட்டதால் பிரம்மா இவ்வாறு செயல்பட்டுக் கொண்டிருக்கிறான். இந்தக் கதையானது கற்பனையாகப் புனையப்பட்டுப் பிற்கால சாஸ்திரங்களில் சேர்க்கப்பட்டி ருக்கிறது. பிரம்மா [புனிதமான பொருளாகிய பிரம்மா] புனைவியலான வேதாந்தத்தின் இந்தக் கண்டுபிடிப்பு பல தெய்வ வழிபாட்டு முறைகளில் ஒன்றாகும்; வேதங்களுக்கு மிகப் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தது; இந்த முறையானது, அவற்றை வேதங்களின் நோக்கம் அல்லது முடிந்த முடிபு என்ற பெயரில் ஒதுக்கி வைப்பதற்காகவே இது வடிவமைக்கப்பட்டது.

(8) இந்துக்களின் தற்காலச் சமூக, மத வாழ்க்கையில் இடம்பெற்றுள்ள, தொடுவதனால், உண்பதனால், தண்ணீர் குடிப்பதனால், ஏற்படுத்தப்பட்டுள்ள சடங்குவழிப்பட்ட தீண்டாமைக் கொள்கை அல்லது தீண்டாமை என்ற அமைப்புமுறை ஜாதி இருப்பைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றது. இந்தத் தீண்டாமை, ஜாதிய அமைப்பு முறையை எடுத்த எடுப்பிலேயே, திடீரென்று வேதங்கள் ஏற்கவில்லை. தீண்டாமை சாதிய அமைப்பு முறை, ஆகியவை **வேதப் படைப்புகள் உருவாக்கப்பட்ட காலத்தில் இருந்திருக்குமேயானால், குறிப்பாகவோ மறைமுகமாகவோ இது இடம் பெற்றிருக்கும். ஆதலின் இவை (தீண்டாமை, ஜாதி) தொன்மைக் காலத்தில் இல்லை என்பது தெளிவு.**

இத்தகைய கருத்துக்களை நாம் இன்னும் எளிதாக விரிவுபடுத்திப் பார்க்க இயலும். நான் எதற்காக அவற்றையெல்லாம் இங்கு எடுத்துக்காட்டினேனோ அதற்கு இது போதும் என்று நான் கருதுகிறேன்; **அதாவது ஜாதி என்பது தற்காலத்தில் எந்தப் பொருளில் எதற்காகப் பயன்படுத்தப்பட்டு வரு கின்றதோ அந்தப் பொருளைப் பற்றித் தொன்மைக்கால இந்தியர்களுக்குத் தெரியாது. ஜாதி என்பது அவர்கள் அறியாத ஒன்றாக இருந்தது.** பிற சமுதாயங்களைச் சேர்ந்த கூட்டாளிகளைப் போல வெவ்வேறு தொழில்களும் அமைப்புகளும் அவர்களிடையே இருந்தன என்பதுவே உண்மை. பஞ்சுக்ஷிதி, பஞ்சஜனா எனும் சொற்கள் வேதங்களில் சில இடங்களில் குறிப்பிடப்படுகின்றன. இவை நான்கு வருணங்களைக் (ஜாதிகளை) குறிப்பவை என்று சாயன ஆச்சாரி கூறுகிறார். ஆனால் பேராசிரியர் லேசன், இது முற்றிலும் தவறான விளக்கம்; இதனை ஏற்க முடியாது என்கிறார். வேதங்களைப் பற்றிய நம்முடைய ஆராய்ச்சிக்கு இந்த உண்மையைப் பற்றிய கண்டுபிடிப்பு மிக இன்றியமையாத தாக விளங்குகிறது. கடுமையான மனவேதனை தருகின்ற, தங்களைத் தாழ்த்துகின்ற ஜாதி நுகத்தடியைத் தங்கள் கழுத்திலிருந்து தாங்களாகவே தூக்கியெறிய முடியாமல் துன்பப் பட்டுக் கொண்டிருக்கின்ற மக்களுக்கு இது உதவியாக இருக்கலாம். (வாய்ப்புண்டு).

வேதங்களை ஆராய்ந்ததன் விளைவாக நாங்கள் கண்டுபிடித்த மற்றுமோர் ஒத்த தன்மையை நான் உற்று நோக்கினேன். வேதங்கள் உருவாக்கப்பட்ட காலத்தில் அறிவுக்குப் பொருந்தாத இந்த ஜாதி உருவாக்கம் மக்களின் கற்பனையிலோ, நடைமுறையிலோ இல்லை. மனிதனுடைய நிலைக்கு இந்த முறை உயர்த்தப்படவில்லை; (உகந்ததாகவும் இல்லை) கடவுளின் படைப்பு களில், அவற்றில் மட்டுமே

அறிவாற்றல், நேர்மை உணர்வு ஆகியவற்றையும், அவர்களுக்கு தெரிதல், அன்பு செலுத்துதல், மனமகிழ்வோடு பணிசெய்தல், படைத்தவனிடத்திலும், காப்பவனிடத்திலும் பக்தியோடிருத்தல் ஆகிய தன்மைகள் வழங்கப்பட்டன. MAN என்ற சொல் சமஸ்கிருதத்தில் உள்ள MANU (உடமையாகப் பெற்றிருப்பவன்) MANA அல்லது MANAS (**லத்தின் மொழியில் MENS ) உள்ளம் என்று (மனம் என்று பொருள்படும் என்ற சொல்லிலிருந்து தோன்றியதாகும் கீழ்நிலை விலங்குகளின் பெயர்கள் எல்லாம் சுவையான மொழியிலேயே அமைந்துள்ளன . பசு , கால்நடை , அல்லது விலங்குகள் ஆகியவை மனிதனின் உடைமைகளாகக் கருதப்பட்டன . லத்தீன் மொழியில் பெசு (PECU) என்றும், பெசுனியா (PECUNIA) என்றும் அழைக்கப்படுகின்றன. வேதகாலத்து இந்தியர்கள் வேள்வியில் விலங்குகளைப் பலியிட்டார்கள். அசுவமேத யாகம் அல்லது குதிரையைப் பலியிடும் யாகம் அவர்களிடம் பழக்கத்தில் இருந்தது,** என்பது வேதங்களில் உள்ள முகாமையான பகுதிகள் பலவற்றில் கூறப்படுகின்றது. கால்நடைகளோடு தொடர்புடைய விலங்குகளை வேள்வியில் பலியிடுவதும் அவர்களது நடைமுறையில் இருந்தது.

பரதனின் வழிவந்த அக்னியே! கருவுற்ற பசுக்களையும், காளைகளையும், ஈனாப் பசுக்களையும் வேள்வியில் பலியிடும்போது நீ முழுமையாக எங்களுக்கு உரியவனாகிறாய் என்று கிருட்சமாதா என்ற ரிசி கூறுகிறார். ஆனால், தற்காலத்தில் இந்து என்ன சொல்கிறான்? இவ்வாறு வேள்வியில் கொல்லப்பட்ட இந்த விலங்குகளை ரிசிகள் மீண்டும் உயிர்ப்பிக்கிறார்கள் என்று கூறுகிறான். இந்தக் குற்றச்சாட்டுக்கு ஒரு சிறிய அடிப்படைச் சான்றுகூட வேதத்தில் இல்லை. மேலும் வேள்விகளில் உயிர்ப்பலி கொடுப்பதற்காக மட்டும் இத்தகைய விலங்குகளைப் பண்டைக்காலத்து **இந்தியர்கள் பயன்படுத்தவில்லை; இவற்றை உணவிற்காகவும், அவர்கள் தங்கு தடையின்றிக் கொன்றார்கள். இந்தச் செயலுக்குச் சான்றளித்து வேதங்கள் தெளிவுபடுத்துவதைப் போல ஆக்ஸ் ஃபோர்டு பல்கலைக்கழகத்தின் சமஸ்கிருதப் பேராசிரியர், தொன்மைக் காலத்து இந்தியர்களிடையே மாட்டுக்கறியை உண்பதைப் பற்றி அச்சமோ, தயக்கமோ ஏதும் இல்லை என்று கூறுகிறார்.** இந்திரனின் சுக்தாக்கள் ஒன்றில் காணப்படும் குறிப்பை வைத்து அவர் இக்கருத்தைத் தெளிவுப் படுத்துகிறார்! ஒரு பசுவை வெட்டுவதைப் போல விருத்தனின் கால்களைத் துண்டு துண்டாக வெட்டினான் என்னும் இந்தக் குறிப்பே அவருக்குத் துணையா கின்றது. அவருடைய ரிக்வேத மொழிபெயர்ப்பின் மூன்றாம் தொகுதியில், வேதங்களில் உள்ள மேலும் இரண்டு பகுதிகளை நமக்கு

எடுத்துக்காட்டுகிறார்; அவர் எடுத்துக்காட்டும் பகுதிகள், நம்முடைய துணிவான முடிவுகளின் நேர்மைத்தன்மையை உறுதி செய்கின்றன. வான்முகில்களின் கதவுகளைப் போதுமான அளவு அவன் திறந்துவிட்டான்; தண்ணீரைப் பாய் நீரோடை போல அவன் வழங்கினான்; ஆதலின் பக்திமான்களெல்லாம் உணவிற்காக இந்திரனிடம் புகலிடம் தேடினார்கள். இந்திரன் அவர்களின் உணவிற்காக கவுரா, கவாயா போன்ற விலங்குகள் அதிகம் நடமாடும் இடத்தைக் கண்டு அவர்களுக்கு அவற்றை உணவாக்கினான். இந்திரனைப் பணிந்து வணங்குங்கள்; இந்தத் தெய்வீகமான புனித உணவை உங்களுக்கு அளித்து அவன் **உங்களைப் பெருமைப்படுத்துகிறான்! இந்த உணவு வகையில் மிக உயர்ந்தது கால்நடை (பசு, காளை)களின் இறைச்சிதான்.** அந்தச் சமஸ்கிருதப் பேராசிரியரின் மொழி பெயர்ப்புக்கு முற்றிலும் வேதங்களே மூல ஆவணங்களாக விளங்குகின்றன. **தொன்மைக்கால இந்தியர்கள் மாட்டுக் கறியை விரும்பி உண்டனர் என்பது கேள்விக்கிடமில்லாதது!** இதனால் அவர்கள் தங்களைக் கொடுமையானவர்கள் என்றோ, இரக்கமற்றவர்கள் என்றோ ஒருபோதும் கருதவில்லை. ஒரு காளை மாடானது ஒரு வண்டியில் அல்லது உழவுப் பணியில் நாள் முழுவதும் துன்பப்படுவதைவிட அதனை வெட்டுகின்றவன் விடுகின்ற குத்து, அடி, வெட்டு என்று அவனது கொலைக் கருவிகளின் மூலமாகத் தருகின்ற துன்பம் மிகக் குறைவுதான்; அல்லது இரைதேடி வருகின்ற காட்டு விலங்குடன் அந்தக் காளை மாடு சிக்கிக் கொண்டு அது நடத்துகின்ற சண்டை மிகப் பெரிய துன்பத்தைத் தருவதாகும். (இதனால் இறைச்சிக்காக அவர்கள் மாட்டைக் கொல்வது, அதன் துன்பத்தைத் தணிப்பதற்காக என்னும் கருத்துடையவர்கள் என்பது பெறப்படுகின்றது.) கீழ்க்காணும் பகுதி நமக்கு ஒரு தெளிவைத் தருகின்றது. இதைப் பற்றிய ஒரு புரிதலை நமக்கு வழங்குகிறது. ஆப்பிரிக்க கொலம்பஸ் என்று அழைக்கப்படுகின்ற டாக்டர் லிவிங்ஸ்டன் அவர்களின் சுற்றுப் பயண நூல்களின் ஒரு தொகுதியில் இப்பகுதி இடம் பெற்றுள்ளது:

அந்தச் சிங்கம் திடீரென்று பாய்ந்து என் தோளைப் பற்றிக்கொண்டது; நாங்கள் இருவரும் ஒன்றாகத் தரையில் சாய்ந்தோம். என் காதருகில் பயங்கர சத்தத்துடன், ஒரு வலிமையான நாய் எலியைப் பிடித்து கவ்வி ஆட்டுவதைப் போல அந்தச் சிங்கம் என்னைப் பற்றி ஆட்டியசைத்தது. பூனை எலியைக் கவ்வி ஆட்டிய முதல் ஆட்டத்திலேயே அந்த எலி ஒரு மயக்க நிலைக்குப் போய்விடுவதைப்போல, அந்த அதிர்ச்சியால் மயக்க நிலைக்கு நான் போய்விட்டேன். அது ஒரு கனவு நிலைக்கு என்னைத்

தள்ளிவிட்டது. அந்த நிலையில் வலி உணர்வு தெரியவில்லை; அச்சம் என்ற உணர்வில்லை; ஆனால் என்னைச் சுற்றி என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை என்னால் நன்கு உணர முடிந்தது. ஒரு நோயாளிக்குப் பாதி மயக்க மருந்து [குளோரோபார்ம்] கொடுத்த நிலையில், பாதி மயங்கிய நிலையில் அவரால் தனக்குச் செய்யப்படும் அறுவை மருத்துவத்தைக் கண்களால் பார்க்க முடியும்; ஆனால் கத்தியால் ஏற்படும் வலி தெரியாது; இதைப் போல எனது நிலை இருந்தது. அந்த அசைவு ஆட்டம் அச்சத்தைப் போக்கிவிட்டது. அந்த விலங்கை இப்போது அருகில் நின்று பார்ப்பதால் அச்ச உணர்வே சிறிதும் இல்லாதவாறு அந்த முதல் ஆட்டம் செய்துவிட்டது. மற்றவற்றின் இறைச்சியை உண்ணுகின்ற விலங்குகளால் கொல்லப்படுகின்ற பிற விலங்குகள் அனைத்திற்கும் இந்த உணர்வே ஏற்படும். அதனால் பெருந்தன்மை வாய்ந்த நம் படைப்புக் கடவுள், மரணத்தின் வலியைக் குறைப்பதற்காக, நமக்கு முன்னேற்பாடாகச் செய்து கொடுத்த இரக்கமுடைய வழிவகை இதுவாகும்.

இதிலிருந்து என்ன கருத்தைப் பெறமுடியும் என்பதை இங்கே கூடியுள்ள பெருமக்களாகிய நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

இங்கு, குறிப்பிடப்பட்டுள்ள விலங்குகள் உருவாக்கம் ஆனவுடன் அவற்றின் மீதான ஆளுமையைப் பண்டைக்கால ஆரியர்கள் தொடர்ந்து பாதுகாத்து வந்தார்கள். அவற்றைத் தங்களின் பணியாளர்களாகவும், மனிதர்களின் உதவியாளர்களாகவும், உழைப்பிற்காகவும் தங்கள் உணவிற்காகவும் ஆரியர்கள் பயன்படுத்தி வந்தார்கள். மனித உயிர் இடம் விட்டு இடம் பெயர்ந்து வேறோர் உருவமாக விலங்காகவோ, பயிர்களாகவோ மறுபிறப்புக் கொள்ளும் என்ற கருத்துத் தோன்றாத காலம் அது. **உயிர், கூடுவிட்டுக் கூடு பாயும் என்ற கோட்பாடு, தொன்மைக்கால வேதங்களில் [இசைப் பாடல்களில்] எந்த இடத்திலும் இல்லை;** ஒரு சிறு அடையாளத்தைக்கூட அவற்றில் காண முடிய வில்லை.

அங்கிரர், ரிபஸ், சுதன்வன் ஆகியோருடைய மகன்கள்.இறுதியாக ஏழு ரிசிகளின் மகன்கள் ஆகியோர் தெய்வீகத் தன்மை வாய்ந்த விண்மீன்களாக உயர்த்தப்பட்டனர். இக்கருத்தானது மனித ஆன்மாவைத் தெய்வீகப் பொருளாக ஈர்த்துக் கொள்ளுதல் என்னும் கோட்பாட்டிற்கு எதிரானது. இதன்பின் உயிர்களின் கூடுவிட்டுக் கூடுபாய்தல் கொள்கை கண்டுபிடிக்கப்பட்டுப் பரப்பப்பட்டது. இது இந்துக்களின் அறிவின் வீழ்ச்சிக்கு மிகப்பெரிய காரணியாக அமைந்துவிட்டது. **விலங்குகளை மனித நிலைக்கு உயர்த்திக் கொண்டுவந்த செயலானது மனிதனை விலங்கு நிலைக்குத்**

**தாழ்த்திவிட்டது.** இது மனிதப் படைப்பில், மனிதனது உயர்நிலையைச் சரியான நிலையைப் புரிந்துகொள்ள விடாமல் அவனை முழுமையாக நீண்ட தொலைவில் கொண்டுபோய் நிறுத்திவிட்டது. அது மனிதனை அலங்கோலமாக்கிச் சிதைத்துச் சீர்குலைத்து, விலங்குகள், பறவைகள், மீன்கள், ஊர்வன முதலான உயிரினங்களின் இழிந்த நிலைக்குத் தள்ளிவிட்டது; மற்ற விலங்குகளின் இழிந்த நிலைக்கு மனிதனை இறக்கிவிட்டது; தாவரங்களைப் போன்ற விலங்குகளின் நிலைக்கு, தாவர வகையில் ஒவ்வோர் உயிரிவகைக்கும் கீழான நிலைக்கு இந்துக்களைத் தள்ளிவிட்டது. இப்போது நான் அறிவுத்திறன் மிகுந்த மனிதனாக உங்கள் முன் நின்று கொண்டிருக்கிறேன்; ஆனால், விரைவில் [மறுபிறப்பில்] குறும்பு செய்யும் ஒரு குரங்காக நான் பிறக்கலாம்! தற்போது நான் இளகிய மனம் படைத்த ஒரு பெண் என்று வைத்துக் கொள்ளுங்கள்; அடுத்து வரும் பிறவியில் கொள்ளையடித்துக் கொண்டு போகும் குள்ளநரியாகலாம்! இப்போது நான் நன்கு படிக்கும் மாணவன்; அடுத்து வரும் ஆண்டில் நான் முட்டாள்தனமான ஓர் எருமையாக இருப்பேன்! இப்போது நான் விளையாடி மகிழும் ஒரு சிறுமி; அடுத்த பிறவியில் நான் துள்ளிக் குதித்தோடும் ஒரு வெள்ளாடு! கரைந்து பறந்தோடும் அதோ அந்தக் காகம், காலஞ்சென்ற என் தந்தையாக இருக்கலாம்! பசியோடு அலைந்து கொண்டிருக்கும் அந்தப் பூனை, அன்பு நிறைந்த என் அம்மாவாக இருக்கலாம்! அதோ சீற்றம் கொண்ட அந்தக் கரடி, ஒரு காலத்தில் எனக்கு அண்ணனாக இருந்தது! ஊர்ந்து வருகின்ற பாம்பு, **காலஞ்சென்ற என் தங்கை! மறுபிறப்புக் கோட்பாட்டின் சரியான வாசகங்கள் இவை! இந்த நாட்டின் மக்களிடையே தற்போதும் நடைமுறையிலிருக்கும் நம்பிக்கை இது! ஊர்ந்து செல்லும் உயிரினங்களுக்கும் கீழாக விலங்குகளைவிடக் கேவலமான அடிமைத் தன்மையும் அச்சமும் கொண்ட மக்களாக இந்த நம்பிக்கை அவர்களைக் கீழ்நிலைக்குக் கொண்டு வந்துவிட்டது.** தற்போதைய ஜாதிய நடைமுறைப் பழக்க வழக்கங்களுக்கும் இவற்றைப் பாதுகாக்கின்ற நிறுவனங் களுக்கும் ஏற்ப இவை அமைந்துள்ளன. அதே நேரத்தில், இந்த நச்சுத்தன்மை வாய்ந்த உயிரினங்கள் இவர்களின் வாழ்விடங்களுக்குள் வந்துவிட்டாலும் அவற்றை இவர்கள் கொல்வதில்லை; இது வேதத்தின் கருத்தியலுக்கு எதிரானதாகும்.

[பாம்பின் நச்சுத் தன்மையிலிருந்து விடுபடும் வழிவகையைப் பற்றி ரிக் வேதம் பல இடங்களில் குறிப்பிடுகிறது. மேலும், நச்சுப் பாம்புகளை அடித்துக் கொல்வதைப் பற்றியும் வேதம் விளக்குகிறது.]

நம் கவனத்தை ஈர்க்கின்ற சுவை மிகுந்த கண்டுபிடிப்புகள் பலவற்றை வேதங்களை ஆராய்ந்ததன் வழியாக நாம் பெற்றுள்ளோம்.

**சதி எனும் கொடுமைச் சடங்கிற்கு வேதம் ஒப்புதல் தரவில்லை; வேதத்தின் எந்த இடத்திலும் சதியை [உடன்கட்டை ஏற்றுதல்] ஏற்றுக் கொண்டமைக்கான சான்று இல்லை.** இருந்தபோதிலும் வேதங்களிலிருந்து சில பகுதிகளை பிராமணர்கள் அடிக்கடி எடுத்துக்காட்டி. இவை கைம்பெண்களை உடன்கட்டை ஏற்றுமாறு கூறுகின்றன என்று எடுத்துக் கூறுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். **இந்தப் பகுதிகளை ஆழ்ந்து ஆராய்ந்த பேராசிரியர் வில்சன், பிராமணர்கள் எடுத்துக் காட்டும் இந்தப் பகுதிகளெல்லாம் கைம்பெண் களைப் பேணிக் காப்பாற்ற வேண்டியதன் இன்றியமையாமையை எடுத்துக் கூறுகின்றனவே தவிர அவர்களை எரித்துக் கொல்வதைப் பற்றியல்ல என்று தெளிவாகக் கூறுகிறார். அறிஞர் கோல்புரூக் எடுத்துக்காட்டும் அந்தப் பிராமண மொழிபெயர்ப்பு வருமாறு:** ஓம்! இந்தப் பெண்கள் விதவை களாக்கப்படக் கூடாது; அவர்கள் கண்ணுக்கு மைதீட்டிக் கொண்டு தங்களை ஒப்பனை செய்து கொண்ட நல்ல மனைவியர்கள்; நெய்க் கிண்ணங்களைக் கையில் ஏந்தியவாறு அவர்கள் இதோ எரிந்து கொண்டிருக்கின்ற இந்த நெருப் பிற்குத் தங்களை ஒப்படைக்கப் போகிறார்கள்! அவர்கள் அழிவற்றவர்கள்; குழந்தைகள் இருக்கிறார்கள்! கணவன்மார் இருக்கிறார்கள். நல்ல அணிமணி களால் தங்களை ஒப்பனை செய்துகொண்ட அவர்கள், இதோ இந்த நெருப்பில் இறங்கட்டும்! அதன் மூலக்கூறு தண்ணீர்தானே! மொழிநூல் அடிப்படையிலான, திறனாய்வு வழிப்பட்ட இதன் மொழிபெயர்ப்பு வருமாறு: இந்தப் பெண்கள் எல்லாம், விதவைகளல்லர்; ஆனால் நல்ல கணவன்மாரைப் பெற்றிருக்கிறார்கள்! கைகளில் எண்ணெய்க் கிண்ணத்தோடும் வெண்ணெய்யோடும் அருகில் வரட்டும்! பிள்ளைப் பேறடைந்து தாயானவர்கள், முதலில் அந்த வழிபாட்டு இடத்திற்குச் செல்வார்களாக! துன்பமோ கவலையோ இல்லாமல், அணிமணிகள் பூண்டு தங்களை நன்கு ஒப்பனை செய்து கொண்டு செல்வார்களாக! இப்பகுதி மிருத்யூ என்பவருக்கு அல்லது மரணத்திற்குச் சொல்லப்பட்ட ஓர் இசைப் பாடலில் இடம் பெற்றுள்ளது ரிக் வேத பிராமணர்களால் இறுதிச் சடங்கின்போது இது பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இந்தப் பகுதியின் பொருள் மாற்றிக் கொள்ளப்பட்டதற்குச் சொற்களின் உருத்திரிபே காரணமாக இருக்கலாம். [Agre என்பதற்குப் பதிலாக Agneh என்று பொருள் கொண்டார்கள்] தாய்மார்கள் முதலில் அந்த வழிபாட்டு இடத்திற்குச் செல்வார்களாக! என்ற தொடர், தாய்மார்கள் முதலில், அந்த

நெருப்பின் கருவறைக்குள் செல்வார்களாக என்று படிக்கப் பட்டதன் விளைவாகப் பொருள் மாறாட்டம் ஏற்பட்டிருக்கலாம். டாக்டர் முல்லர் மிக நன்றாகவே சொன்னார்: பழி பாவங்களுக்கு அஞ்சாத புரோகித வர்க்கத்தால் செய்ய முடிந்த மிக மிக இழிந்த செயல் இதுவாகத்தான் இருக்க முடியும்.

மேல் எடுத்துக்காட்டிய அந்தப் பகுதி இழப்புக்குஆளான கைம்பெண்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை. ஆனால், அவளிடம் துக்கம் விசாரிக்க வந்த இழப்புக்கு ஆளாகாத பெண்களைப் பற்றிப் பேசுவது. கையற்ற நிலையில் உள்ள அந்தக் கைம்பெண்ணை நோக்கி ரிக் வேதம் இவ்வாறு கூறுகிறது:

பெண்ணே நீ எழுக! இந்த உலக வாழ்க்கைக்கு வா! எவனுடைய அருகில் நீ துயில் கொண்டிருந்தாயோ அவனது வாழ்க்கை இப்போது முடிந்துபோய்விட்டது. எழுந்து வா! எங்களோடு இணைந்துகொள்! உன் கைகளைப் பற்றி உனக்குத் தாய்மைப் பேற்றை நல்கிய உன் கணவனுக்கு மனைவி என்ற முறையில் நீ அனைத்துக் கடமைகளையும் அவனுக்குச் செய்து முடித்திருக்கிறாய்

அக்கறையோடு விடுக்கப்படும் இந்த அழைப்பில் அன்பும் இரக்கமும் கலந்த இனிமையான வெளிப்பாட்டைக் காண முடிகிறது. குற்றச்சாட்டிற்கு ஆளாக்கப் பட்ட [சதிக்கு] இக்கைம்பெண்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள கெட்ட பெயர், **இந்துத்துவத்தின் பழைய தொன்மையான வடிவங்களில் இல்லை. உடன்கட்டை ஏறுதலுக்கு [அல்லது] சதி நடந்ததற்கான சான்றோ அல்லது அது நடத்தப்பட வேண்டும் என்ற கட்டளையோ மனுதருமத்தில்கூட இல்லை.**

உடன்கட்டை ஏற்றுதல் நிகழ்வில் இன்று நடைபெறுவதைப் போல, அன்றும் ஆண்களை உயிர்ப்பலி கொடுக்கும் முறையை வேதங்கள் நேரடியாகவே, வெளிப்படையாகவே ஊக்கப்படுத்துகின்றன என்பதை என்னால் மறுக்க இயலவில்லை; அதற்காக நான் வருந்துகிறேன். மனித உயிர்ப் பலி அல்லது நர்மேதா என்று அதற்குப் பெயர். ரிக் வேதத்தின் முதல் அஷ்டகாவில், ஒரு மதச் சடங்கு நிகழ்வில் மனித உயிர்ப்பலி பற்றிய குறிப்பு வருகிறது. அஜிகார்த்தா என்பவனின் மகனான சுனாசெபாஸ் உயிர்ப்பலி கொடுக்கப்படுகின்ற கம்பத்தில் கட்டி வைக்கப்பட்டுப் பலியிடப் போகின்ற மதச் சடங்கின்போது அவன் வேத இசைப் பாடல்களை இடைவிடாது ஓதிக் கொண்டிருந்தான் என்பதை ரிக் வேதத்தின் பலஇசைப் பாடல்கள் கூறுகின்றன. இந்த மதச் சடங்கு ஏறக்குறைய வேத

காலத்திலிருந்து இன்றுவரை இந்தியர்களிடையே தொடர்ந்து இருந்துவருகிறது. [எலிபென்டா குகைச் சிற்பங்களில் சிவன், பைரவர் வடிவில் ஒரு குழந்தையைப் பலியிடப் போகிற காட்சி காணப்படுகிறது. தன் ஒரு கையில் பலியிடப் போகிற குழந்தையைப் பைரவர் பிடித்திருக்கிறான்; மற்றொரு கையில் அந்தக் குழந்தையை வெட்டுவதற்குக் கூர்மையான வாளை வைத்திருக்கிறான்; மூன்றாவது கையில், நிகழ்வைத் தெரிவிக்கும் மணி; நான்காவது கையில் வெட்டப்படும் குழந்தையின் குருதியைப் பிடிப்பதற்காக ஒரு பாத்திரம்; இவ்வாறாக அந்தச் சிற்பம் மேலும் நான்கு கைகளுடன் மொத்தம் எட்டுக்கைச் சிற்பமாக பைரவனாகச் சிவன் செதுக்கப்பட்டுள்ளான்.]

**குழந்தைத் திருமணங்கள் எவையேனும் வேதகாலத்தில் நடந்திருக்குமே யானால் அவை ஒருபோதும் கட்டாயப்படுத்தப் பட்டவையாக இருக்க வில்லை.** பின்வரும் பகுதி அதனை உறுதி செய்வதாக அமைந்துள்ளது; நல்லொழுக்க முடையவளாகப் பெண் தன் பெற்றோருடன் ஒரே வீட்டில் வளர்ந்து வருகிறாள்; அவர்களின் நல்லாதரவை நாடுபவளாக அவள் இருக்கிறாள்; ஆதலின் செல்வம் வேண்டி நீ எங்களிடம் வருவாயாக. வேதத்தில், பெண் ஆரியர்களின் குடும்ப விளக்காகக் காட்டப்படுகிறாள்; அவளுடைய இன்றியமையாச் சிறப்பும், அவள் பெற்ற அன்பும் அய்யப்பாட்டிற்கிடமில்லாத அடையாளங்களாக அமை கின்றன. பெண்ணுக்குப் பெற்றோர் அடிக்கடி பொருள் கொடுத்து உதவினார்கள்; அது அவளுக்கென்று ஒதுக்கப்பட்டது. அவள் கணவனது உடைமையை விடத் தனிச்சிறப்பு வாய்ந்ததாக அது இருந்தது. தற்காலத்தில் தனிமைப்படுத்தப்பட்டு தனிமைச் சிறையில் இருப்பதைப் போன்ற துன்பங்களை அன்று அவள் அனுபவிக்கவில்லை. **மதச் சடங்குகளில் கூடத் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்வதற்கு அன்று பெண்கள் அனுமதிக்கப்பட்டார்கள். பேராசிரியர் வில்சன், இது சட்ட விதிகளுக்கு எதிரானதாகும்; சட்டம், மதச் சடங்குகளில் பெண்கள் பங்கெடுத்துக் கொள்வதைத் தடை செய்கிறது; திருமணத்தில் அவர்கள் பங்கேற்கலாம்; புனிதமான, வேத மந்திரங்களைப் பெண்கள் ஓதக் கூடாது என்று சட்டம் தடைசெய்கிறது என்று கூறுகிறார்.**

வேத காலத்து ஆரியர்களால் நிறுவப்பட்டு நடைமுறையில் செயல்படுத்தப் பட்டு வந்த மதத்தின் செல்நெறியானது, மதப் பற்றற்ற ஒரு காலம் நிலவிய தொன்மைமிக்க அந்தக் காலத்தில் கூட, பிற்காலத்து இந்துக்கள் பின்பற்றிவரும் மதச் செயற்பாடுகளைவிட மிக

எளிமையானதாகவும், திறன்மிக்கதாகவும் அமைந்திருந்தது. முப்பத்துமூன்று கடவுளர்கள் வேதங்களில் குறிப்பிடப் படுகிறார்கள். சொர்க்கத்தில் 11 கடவுள்கள்; இந்தப் பூமியில் 11 கடவுள்கள்; நடுவானில் புகழோடு விளங்கும் 11 கடவுள்கள். ஆக முப்பத்து மூவரும் ஆகிய நீங்கள், நாங்கள் கொடுக்கும் இந்த உயிர்ப்பலியால் மகிழ்ச்சியடைவீர்களாக, என்று ரிக்வேதத்தில் குறிப்பிடப்படுகின்றது. பிற்காலத்து இந்துக்கள் தம் மனம்போன போக்கில் ஏழு சுழியங்களை [சைபர்களை] இந்த 33 உடன் சேர்த்து 330,000,000 கடவுளர்களாகப் பெருக்கிக் கொண்டார்கள். சொல்வதற்கு இது எளிமையாக இருக்கிறது என்பதற்காக இப்படிப் பெருக்கிக் கொண்டார்கள். ரிக் வேதத்திலேயே இவ்வாறு கடவுளரின் எண்ணிக்கையை மனம்போன போக்கில் பெருக்கிக் கொண்டமைக்கான சான்றுகள் கிடைக்கின்றன.

வேதங்களின் பல பகுதிகளில், சொர்க்கத்தையும், இந்தப் பூமியையும் மூலக் கடவுளர்களாகக் [பெற்றோர் கடவுள்] குறிப்பிடுகின்றனர். மற்ற கடவுளர்கள் எல்லாம் இவர்களின் புதல்வர்கள் என்று ரிக் வேதம் கூறுகிறது. மற்ற கடவுளர்களும் வேதங்களில் அடிக்கடி குறிப்பிடப்படுகிறார்கள். முப்பெருங் கடவுளர்களாக நம் கவனத்திற்குக் கொண்டு வரப்படும் மூவரும், கொள்கை வழியாகத் தொடர்புடையவர்களல்லர். கருத்து வழியாகத் தொடர்புடையவர் களுமல்லர். அவர்களில் இந்திரன் நம்முடைய வான்வெளிக் கடவுள், வான் முகில்களைத் தனது இடிமுழக்கத்தால் துளைத்து, [இடி என்பது இந்திரனின் உதவியாளர் துவாஸ்திரி] மழைச் செல்வத்தைக் கொட்டுமாறு அவர்களைத் தூண்டுகிறான். கிரேக்கர்களின் அவ்ரணா என்பது வருணா – வருணபகவான் சொர்க்கத்தின் மேற்கூரைக் கடவுள்; வெப்பம் – நெருப்பின் கடவுளாகிய அக்னி [லத்தீனில் இக்னிஸ்] அக்னியின் வேலை புரோகிதம் செய்தல், தன்வயப்படுத்திக் கொள்ளல், மற்ற கடவுளர்க்குத் தகவல் தெரிவிப்பவராக இருப்பது அல்லது கொடுப்பவர். அதாவது அனைத்து உயிர்ப்பலிகளையும் மற்ற கடவுளர்க்கு வழங்குபவர். இந்தக் கடவுளர்களுக்கெல்லாம் முறையே இந்திராணி [இந்திரன்], வருணானி [வருணன்], அக்னாயி [அக்னி] என்று மனைவியர் உள்ளனர். இந்திரனோடு தொடர்பு கொண்டவரும் அடிக்கடி அவனுக்குத் துணையாயிருப் பவரும் ஆகிய, காற்றுக் கடவுளாகிய வாயு; சிவனின் இன்னொரு பெயராகிய ருத்ரா வேதங்களில் காணப்படாத பெயர் இது; அப்போது ருத்ரனைப் பற்றி எவருக்கும் தெரியாது. ருத்ரன் சீறும் புயல்களின் கடவுள்; மாருட்ஸ் அல்லது தென்றல். இவர்கள் ருத்ரனின் மகன்கள்; வான்வெளி மண்டலத்தின் கடவுள் விஷ்ணு. ஒளியின்

கடவுளர்கள் முதன்மையான இடத்தைப் பெறுகின்றனர்; அவர்கள் சூரா அல்லது சூரியா, சூரியன் எனப்படுகின்றனர். சூரியனின் பல்வேறு செயற்பாடுகளினால் ஏற்படுகின்ற விளைவுகளின் அடிப்படையில், நாளும் பொழுதும் மாதமும், பருவமும் அடைகின்ற முன்னேற்றங்களினால் பல்வேறு பெயர்கள் கொடுக்கப்பட்டன. உஷா என்றும் புலரும்பொழுது என்றும் அஷ்வின்ஸ் அல்லது குதிரைகள் பூட்டிய தேர் மீதமர்ந்து செல்வோன் என்றும், முன்னோடி வருகின்ற சூரியக் கதிர்கள் என்றும் பல பெயர்கள் கொடுக்கப்பட்டன; சந்திரமாஸ் அல்லது நிலாவும் கூடப் புலரும் பொழுதின் முன்னோடியாகக் கருதப்பட்டது. சந்திரமாஸ் (சந்திரன்) என்பது சமஸ்கிருதத்தில் ஆண்பால்! பேராசிரியர் லேசன் சந்தார் (candor ). ஒளி வெளிச்சம் என்று பொருள்படும் லத்தீன் மொழியிலிருந்து வந்தது என்கிறார். உயர்வுபடுத்திக் கூறப்படும் சூரிய ஒளிக்கதிர்கள் வாசுஸ் எனப்பட்டன. நக்தா அல்லது (Night ) இரவு என்பது பெண்பாற் கடவுள்! நக்தா என்பது லத்தீன் மொழியிலுள்ள நாக்சு என்ற சொல்லோடும் கிரேக்கமொழிச் சொல்லாகிய நிக்த் என்பதனோடும் நெருங்கிய தொடர்பு கொண்டதாகும். எமா (எமன்) மனிதர்களின் விதியை முடிவு செய்யும் கடவுள்; யாமி என்பது எமனுடைய மனைவி; மிருத்யா என்பது மரணம்; இவை யாவும் அன்று வழக்காற்றில் வந்துவிட்டன. சுக்ரா என்பது சமஸ்கிருதத்தில் ஆண்பால்; (கதிரவனைச் சுற்றிச் செல்லும் இரண்டாவது (venus - கோள்) சுக்ரா என்பது வெள்ளிக் கோள்; சோமபானத்தால் சுக்கிரன் போதையூட்டப்பட்டதாக சாம வேதத்தில் குறிப்பிடப்படுகிறது. சோம பானத்தின் கடவுள் சோமன்; சில இடங்களில் நிலாவைக் குறிப்பாகச் சுட்டிக் காட்டுவதற்கு இச்சொல் பயன் படுத்தப்பட்டிருக்கிறது. பிரகஸ்பதி, வேதங்களில் வியாழன் (Jupiter ) என்னும் கோளாகக் குறிக்கப்படவில்லை. அக்னியின் மற்றொரு பெயராகிய வழிபாட்டின் கடவுள்; (வழிபடு முறைக்குக் கடவுள் என்று பெயர்). இதற்கு வேறு பல பெயர்களும் உண்டு; பிரம்மா என்பதைப் பற்றி முன்னரே நாம் குறிப்பிட்டுள்ளோம். பின்னர், சரஸ்வதி, பிரம்மாவின் மனைவியாகிறாள்; இவள் சொல்லாற்றல் சொல்வன்மையின் கடவுள். இலா அல்லது இடா என்பவற்றோடும் பாரதி (பூமி) என்பதனோடும் தொடர்புபடுத்தப் படுகிறாள். இவர்கள் இசைப்பாடலின் தெய்வங்கள்! அபா என்பது தண்ணீர்; இது பன்மையில் வருகிறது தண்ணீர்கள்; மிக உயர்வுபடுத்திக் கூறப்படுகிறது. அப்தியாஸ் என்பவர்கள் தண்ணீரின் கடவுள்கள். விஷ்வ தேவர் என்பவர்கள் ஒட்டுமொத்தக் கடவுளர்களாகச் சில நேரங்களில் குறிப்பிடப்படுகின்றனர். சில நேரங்களில் மனிதரைப் பாதுகாக்கும் சிறப்புக் கடவுளராகவும் இவர்கள்

குறிக்கப்படுகின்றனர். பார்சி இனத்தவரின் அம்சாஸ்பாண்ட்ஸ், இசாட்ஸ் ஆகியவற்றோடு இவை உறவுடையவை என்று நான் கருதுகிறேன். புனைந்து மேம்படுத்தப்பட்டவற்றுள் குறிப்பிடத்தக்க மற்றொரு கடவுள் ஆகா (Agha ) என்பது. இது தீமையின் கடவுளாகும். இது பெண்பாற் கடவுள்; பார்சிகளின் அஃகி ரிமான் என்பதனோடு இது தொடர்புடையதாகும். சிந்து அல்லது இண்டஸ் ஆறு ஒரு கடவுள்; வேதங்களில் கூறப்படுகின்ற மற்ற ஆறுகளும் கடவுள்களே! அனைத்தும் பெண்பாற் கடவுளர்கள். கடலும் ஒரு புனிதமான தெய்வம்! பிட்ரிஸ் (பிதிர்கள்) அல்லது சிறந்த முன்னோர்கள், பார்சிகளின் ஃபாருகான்சை ஒத்தவர்கள். அடிக்கடி குறிப்பிடப்படுகிறார்கள். வாசுக்கள் எனப்படுவோர், ஏற்கனவே குறிப்பிட்டுள்ளபடி, சூரியக் கதிர்கள் ஆவர்; இவர்களும் அவர்களைப் போலவே கடவுளராவர். ரிபூ என்போர், தெய்வத் தன்மை பொருந்திய மனிதர்கள்; பின்னர் இவர்கள் விண்மீன் குழுக்களில் ஒன்றில் முதன்மை மீன்களாக மாறியவர்கள். இனிமேலும் வேதக் கடவுளர்களைப் பற்றி விரித்துரைக்க நான் விரும்பவில்லை. இந்துக்களின் முதன்மை-யான **கடவுளரில் பலர் வேதங்களில் ஒருமுறைகூடக் குறிப்பிடப்பட வில்லை என்பதை நான் கோடிட்டுக் காட்ட வேண்டியவனாக இருக்கிறேன். மேலும் அவை பிற்காலத்தவரின் கண்டுபிடிப்புகள் என்றுதான் நாம் கருத வேண்டியுள்ளது.**

வேதங்களில் நாம் சிவனைக் காண முடியவில்லை; வேதங்களில் குறிப்பிடப் படுகின்ற ருத்ரனைச் சிவனாகப் பிராமணர்கள் காட்ட விரும்புகிறார்கள். சிவனுடைய குடும்ப உறுப்பினர்களான அவன் மனைவியர்கள் துர்கா அல்லது காளி, அவன் மகன்கள் கணேசன், கார்த்திகேயன் ஆகியோர் எவரையும் வேதங்களில் காணமுடியவில்லை. வேதங்-களில் நாராயணன் இல்லை; வேதங்களில் வருகின்ற விஷ்ணு, இன்று மும்மூர்த்திகளில் ஒருவராகக் காட்டப்படுகின்ற விஷ்ணு அல்ல; இருவரும் வெவ்வேறு பண்புடையவர்கள். இராமனும், கிருஷ்ணனும் வேதங்களில் இல்லை. அதன் பின்னர், தெய்வத் தன்மை ஏற்றப்பட்ட வீரர்களாக, விஷ்ணுவின் அவதாரங்களாக அவர்கள் புகழப் பட்டார்கள். வேதங்களில், விண்கோள்கள், தெய்வங்களாக்கப்பட்ட விண்கோள் களையும், இந்துக்களின் பல சிறு தெய்வங்களையும் நாம் காண முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

வேதங்கள் இந்தக் கடவுளர்களைக் கையாண்டுள்ள முறை மிகவும் சுவை பயப்பதாகும். இது பல தெய்வ வழிபாட்டு முறை, புராணப்

புனைகதைகள் ஆகியவற்றின் தோற்றத்தைப் பற்றி அறிந்துகொள்ளப் பேருதவியாய் இருக்கின்றது. பொதுவாகப் பல்வேறு பொருள்கள், ஆற்றல்கள், முகவர்கள், இயற்கையின் செயற்பாடுகள் ஆகியவற்றிற்குத் தெய்வீகத் தன்மையை ஏற்றி இவற்றை வான் மண்டலத்தோடு தொடர்புபடுத்தி வைத்துவிட்டனர். கடவுளின் தெய்வீகத் தன்மையையும், எங்கும் நிறைந்திருக்கும் இயல்பையும் உணர்ந்து கொள்ளத் தவறுகின்றவர்கள் அல்லது ஏற்க மறுக்கின்றவர்கள் மரபுவழியாக அதாவது வழிவழியாகச் சில கருத்துக்களைக் கொண்டிருப்பவர்கள், தங்களைச் சுற்றியுள்ள ஆற்றலையும் புகழையும் தெளிவாக வெளிப்படுத்திக் காட்டி அவற்றைப் பல்வேறு தெய்வங்களின் அறிவார்ந்த செயல்களாக ஏற்றிவிட்டனர். இது ஓரளவுக்குக் குறிப்பாகவும், கவிதைவகை விளக்கமாகவும் உயர்வு நவிற்சியாகவும் கலந்து காலப்போக்கில், உயிர் வாழும் மாந்தரின் வெளிப் பாடெனத் தவறாகப் பொருள் கொள்ளப்பட்டது. இந்த நகரத்தின் படித்த இளைஞர்களை, வேதமதத்தின் இந்த இயல்புகளை ஆராய வேண்டுமென்று என் சொற்பொழிவுகளின் வாயிலாக நான் வலியுறுத்தி வந்தேன். டாக்டர் மாக்ஸ் முல்லர், 1856இல் ஆக்ஸ்போர்டு கட்டுரைகள் 1856 என்ற நூலில், ஒப்பியல் நோக்கில் புராணப் புனைவியல் என்ற தலைப்பில் வேதமதத்தின் இயல்புகளை வியக்கத்தக்க முறையில் ஆராய்கின்றார். மிகச் சிறந்த அந்த ஆவணத்தின் ஒரு சிறு பகுதியை மட்டும் நான் இங்கே எடுத்துக்காட்ட விரும்புகிறேன்;

நல்வாய்ப்பாக மத அமைப்பு முறையோ, புராணப் புனைவியலோ வேதத்தில் இல்லை; வேத இசைப்பாடல் சிலவற்றில் காணப்படும் பெயர்கள் மக்களின் பொதுப் பெயர்களாகவும், வேறு சிலவற்றில் கடவுளரின் பெயர்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. ஒரே கடவுள் சில இடங்களில் தலைமைக் கடவுளாகவும், சில இடங்களில் சமநிலையில் உள்ள கடவுளாகவும், வேறுசில இடங்களில் மற்ற கடவுளர்க்குக் கீழ்நிலையில் உள்ள கடவுளாகவும் காட்டப் படுகிறார். கடவுளர்களாகக் காட்டப்படுகிற இவர்களின் முழுத் தன்மைகளும், இயல்புகளும் மிகத் தெளிவாகத் தெரிகின்றன. அவர்களின் மூதாதையர் வழி மரபு வரலாறு இல்லை! ஆண் கடவுளர்களுக்கும், பெண் கடவுளர்களுக்கும் முறையாக முடிவு செய்யப்படுகின்ற திருமணங்கள் காணப்படவில்லை; தந்தை சில இடங்களில் மகனாகவும், சகோதரன் கணவனாகவும், ஒரு வேத இசைப் பாடலில் தாயாக வருபவள், மற்றோரிடத்தில் மனைவியாகவும் இருக்கிறார்கள். அதை எழுதிய கவிஞனின் சிந்தனை மாறுபடுகிறபோது இந்தக் கடவுளரின் இயல்புகளும் தன்மைகளும் மாறுபடுகின்றன.

கிரேக்க நாட்டைச் சேர்ந்த ஓமர் எனும் கவிஞரின் கவிதைகளுக்கு அடிப்படையாக அமைந்தவை புராணக் கதைகளே. ஓமரின் கவிதைகளில் முழு வளர்ச்சி நிலையை அடைந்து அதன் பின்னர் வீழ்ச்சியடைந்துவிட்ட புராணக் கதைகளையும், வேதங்களில் வளர்க்கப்பட்டுவந்த புராணக் கதைகளையும் ஒப்பிட்டு ஆராய்ந்து பார்க்கும்போது இந்தியாவின் தொன்மைக்காலக் கவிதை களுக்கும், தொன்மைக் காலக் கிரேக்க இலக்கியங்களுக்கும் மிக நீண்ட இடைவெளி இருப்பதை நாம் தெளிவாக உணர முடிகின்றது. **வேதம் என்பது ஆரிய இனத்தவரின் உண்மையான இறைமரபுக் காவியம்** (தெய்வப் பரம்பரைக் கவிதைகள்); கிரேக்க ஈசியாட் என்பது மூலப் படிவங்களின் உருச் சிதைவிற்குள்ளான கேலிச் சித்திரங்கள். மனித மனம், ஒரு புனிதமான ஆற்றலைப் பற்றிய இயல்பான விழிப்பு நிலையில் இருந்தபோதிலும் தவிர்க்க முடியாத வகையில் வலிமையான மொழி ஆற்றலால், இயற்கைக்கு மாறான, புலனாகாத நுண்பொருட் கருத்துக்களால் இழுத்துச் செல்லப்படுவதை அறிய வேண்டுமானால் நாம் வேதத்தைப் படிக்க வேண்டும். இந்துக்கள் எதை வழிபட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பற்றி அவர்களுக்கு நாம் சொல்ல விரும்பினால் அவர்கள் வழிபட்டுக் கொண்டிருப்பவை, குறிப்பிடத்தக்க இயற்கை நிகழ்வுகளின் வெறும் பெயர்கள்தான்! அவை தெளிவற்றதோர் இருண்மை நிலைக்குக் கொண்டு செல்லப்பட்டு, பின்னர் உயர்வுபடுத்தப்பட்டுப் படிப்படியாகத் தெய்வீக நிலைக்கு ஏற்றப்படுகின்றன என்பதை அறிந்துகொள்ள அவர்கள் வேதத்தைப் படிக்குமாறு நாம் செய்ய வேண்டும். பண்டைக்கால மதகுருமார்கள், மாற்று மதக் கடவுளர் களை (புறச் சமயக் கடவுளரை)ப் பேய் பூதங்களாக, கெட்ட ஆவிகளாக எண்ணிப் பரப்பியது மிகப் பெரிய தவறாகும். இதே தவறை, இந்துக் கடவுளர்களைப் பற்றி நாமும் செய்துவிடக் கூடாது என்பதில் நாம் கவனமாக இருக்க வேண்டும். **இயாஸ், எமேரா, நிக்ஸ், அபேதா ஆகியோரைப் போலப் பிறிதின் சார்பற்றுத் தனி இருப்புக் கொண்ட கடவுளர்களாக இந்துக் கடவுளர்களைக் கருத இயலாது. அவர்கள் நடிகர்களில்லாத வெறும் முகமூடிகள்; அவர்கள் மனிதர்களின் படைப்புகள்; அவர்கள் மனிதர்களைப் படைத்தவர்களல்லர். அவர்கள் வெறும் பெயர்கள் மட்டுமே! தெய்வத்தன்மை சார்ந்தவர்களல்லர்! உயிர்கள் இல்லாத பெயர்கள்! பெயர்கள் இல்லாத உயிர்களுமல்ல!**

இதேமுறையில்தான் புராணக் கதைப் புனைவுகளின் தோற்றத்தைப் பற்றியும் வேதங்கள் விளக்குகின்றன. ஆன்ம நேய அனைத்து இறைக் கோட்பாட்டின் (பல தெய் வழிபாடு) தோற்றம் பற்றியும் அவை நமக்குத் தெளிவாக விளக்குகின்றன. இக்கோட்பாட்டினைப் பற்றி நாம் ஏற்கனவே

குறிப்பிட்டுக் காட்டியுள்ளவாறு வேதங்கள் உறுதியாக ஆணித்தரமாக எதனையும் கூறவில்லை.

வேதங்களில் குறிப்பிடப்படுகின்ற தனிக் கடவுளர்களை வழிபடுவோர் அக்கடவுளர்களே தங்களுக்கு எல்லாமாகி இருப்பவர்கள் என்றும், கூட்டுக் கடவுளர்களின் வேலைகளையெல்லாம் அவர்களே செய்கிறார்கள் என்றும், அவர்களே அனைத்துப் பொருள்களின் மேலும் ஆதிக்கம் செலுத்துகின்றனர் என்றும் பேசப்படுகின்றனர். இந்தப் பூமியின் கடவுளச்சியாகிய ஆதித்தி இவ்வாறு பேசப்படுகிறாள்:

ஆதித்திதான் சொர்க்கம்; ஆதித்திதான் வான் மண்டலம்; ஆதித்தி தான் தந்தை, தாய், மகன் எல்லாம்; ஆதித்திதான் விஷ்வ தேவா [அனைத்துக் கடவுளரும் ஒன்று சேர்ந்தநிலை] ஆதித்தி மக்கள் அய்ந்தன் தொகுதி; ஆதித்தி தலைமுறை; ஆதித்திதான் பிறப்பு.

இவ்வாறு ரிக் வேதம் கூறுகிறது. இவ்வாறே இந்திரனும் கீழ்க்கண்டவாறு கூறுவதாக வேதம் கூறுகிறது:

நானே மனுவாக இருந்தேன்; நானே சூரியனாக இருக்கிறேன்; அறிவிற் சிறந்த ரிஷியாகிய காக்ஷிவான் நான்தான்; என்று இன்னும் பலவாறாக இந்திரன் பேசுகிறான்.

சூரியனாக இருந்த அவனை, இந்திரா, மித்ரா, வருணா, அக்னி என்று அவர்கள் பெயரிட்டு அழைத்தனர். விண்ணுலகைச் சேர்ந்த வலிய இறக்கைகளைக் கொண்ட காருட்மேத் ஆகவும் அவன் விளங்குகிறான். திறமைவாய்ந்த ஒருவனைப் பல பெயர்களால், அக்னி, யமன் மாதரிஷ்வன் என்று அழைக் கின்றனர் என்று ரிக் வேதம் கூறுகின்றது. இவ்வாறு இக்கடவுளர்கள் பலவாறு அடையாளப் படுத்தப்பட்டு உயர்வுபடுத்தப்பட்டு, தெய்வத்தன்மை உடையவர் களாக்கப்பட்டுக் காட்டப்படுகின்றனர். இது நேரடியாகப் பல தெய்வ வழிபாட்டு முறைக்கு வழியமைத்துக் கொடுக்கிறது. குறிப்பாகச் சுட்டிக் காட்டப்பட்ட இவை, இந்துத்துவக் கருத்து யூக வளர்ச்சியில், உண்மை நிகழ்வுகளாகக் கருதப்பட்டன. முதலில் இறைநிலை உணர்வாக இருந்த ஒன்று, பிற்காலத்தில் ஒரு நிறைவான தத்துவமாகக் கருத்துருவாக்கம் பெற்றது.

கடவுளரின் கற்பனை உருவங்கள், அதாவது சிலைகள் மனிதர்களின் கைவண்ணத்தால் உருவானவை; இச்சிலைகள் சில பகுதிகளில் மட்டும் வேதகாலத்தில் பயன்பாட்டில் இருந்தன. சில நேரங்களில் இச்சிலைகளைப்

பற்றித் தனிச் சிறப்புடன் பேசப்பட்டிருக்கின்றது. **ஆனால், ஆரியர்களின் நேரடியான மதச் செயற்பாடுகளில் இச்சிலைகள் இடம் பெறவில்லை; இச்சிலைகளைப் பற்றிய குறிப்பும் இல்லை; ஆரியர்களின் மதச் செயற்பாடு களில் முதன்மையாகப் புனிதமான நெருப்பை வளர்த்தல் கடவுளர்க்குச் சோம பானம் கொடுத்தல், நெய் அளித்தல், விலங்குகளை வேள்வியில் பலியிடுதல், வேத இசைப் பாடல்களை ஓதிப் பாடுதல் முதலானவை அடங்கும்.**

பிற்காலத்தில் இந்தியர்கள் அவர்களின் வழிபாட்டில் துணைப் பொருட்களாய் இருந்தவை மறையத் தொடங்கியபோது, அவர்களின் கடவுளர் சிலைகளை – உருவங்களைச் செயற்கையாகச் செய்து வைத்தனர்; ஆரியர்களின் பாக்டீரியா சகோதரர்கள் [நுண்ணுயிரிகள்] சொராஸ்டிரியர்கள் இவர்களின், பார்சி மொழியில் காணப்படும் இசைப்பாடல்கள் வேத இசைப்பாடல்களோடு பெரிதும் ஒத்திருந்தன; இந்தியர்கள் வழிபட்ட கடவுளர்களை அவர்கள் வழிபட்டவாறே இவர்களும் வழிபட்டனர். இது வழிபாட்டில் ஏற்பட்ட வீழ்ச்சி என்றும் ஊழல் மலிந்ததென்றும் கருதப்பட்டு பெரும் எதிர்ப்புக்குள்ளானது. இந்துக்களின் தேவர்களைப் பூதங்கள் என்றும், இந்திரனை அண்டார் பூதம் என்றும், அவர்கள் நடத்தினர். ஒருவகையில் இந்த எதிர்ப்புக்காக சொராஸ்டிரியர்களை நாம் மதிக்க வேண்டும். **மேற்கில், மிகுந்த தொலைவிலிருந்து வந்துள்ள நாம், ஆரியர்களின் உடன்பிறந்தவர் களாகிய நாம், உருவ சிலை வழிபாட்டை அது இயற்கையோ செயற்கையோ சிலை வழிபாட்டை அது எந்த வடிவினதாயினும் அதனை எதிர்த்து நாம் குரல் எழுப்புகிறோம். சொர்க்கத்தின் ஒளிப்பிழம்பாய் நிற்போராயினும்,** புகழ் வாய்ந்த பொருளாக நம் கண்களுக்குத் தோற்றமளிப்பதற்கும்கூட, தலைவர், அசுரா, அல்லது அகுரா என்ற பெயர்களைக் கொடுப்பதற்கு நாம் மறுக்கிறோம். [அசுரா என்பது ரிக் வேதத்தில் சூரியனுக்கும், நெருப்புக்கும் வழங்கப்படும் பெயர்கள். அகுரா என்பது அறிவுசான்ற ஆசிரியன்.] சூரியனைப் பரம்பொருளின் [தெய்வத் தன்மையின்] செயலாகவும், அதன் பொருட்டுச் செயற்படுகின்ற இயற்கை ஆற்றலாகவும் நாம் கருதுகிறோம். ஆதலால், மிகுந்த பக்தியுடன்,

எல்லையற்ற இறைவனே! நிகரில்லாத ஒருவன் நீ! யாருடைய புகழ், அதோ அந்தச் சூரியனில் ஒரு பெரும் புள்ளியாக விளங்குகிறதோ, உன்னோடு ஒப்பிடுகிறபோது, அவனுடைய அழகு எப்படி மங்கி ஒளிகுன்றி

நிற்கிறது! அவனுடைய பொன்னிற ஒளிக்கதிர்கள் ஒளிவீசித் தணிந்து போய்விட்டன! என்று நாம் கூறுகிறோம்.

இதுவரை இங்கே குறிப்பிட்டுக் காட்டப்பெற்ற கருத்துக்களை, இப்போது அவற்றின் மதத் தொடர்புக் கூறுகளோடு விரிவாக நான் விவாதிக்க விரும்பவில்லை. சிறுசிறு கருத்துக்கள் நம்முடைய முதன்மைப் பொருளோடு தொடர்புடையவையாக இருந்தாலும், எல்லாவற்றையும் விருப்பமின்றி நான் விட்டுவிடவில்லை. இப்போது இவற்றை ஒரு முடிவிற்குக் கொண்டு வருகிறேன்.

இண்டஸ் ஆற்றின் கரைகளில் இருந்த ஆரியர்களைப் பற்றிய நம்முடைய சுருக்கமான இந்த ஆய்வு இங்கு கூடியுள்ள அனைவருக்கும் பயன்பட்டிருக்கும் என்று நான் நம்புகிறேன். குறிப்பாக எழுச்சி மிகுந்த பல்வேறு தட்பவெப்பநிலை களைக் கொண்ட பிரிட்டனின் ஆதரவைப் பெற்ற இந்த நிறுவனத்தின் உறுப்பினர் களுக்கும், இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வந்து இங்கு குழுமியுள்ள இந்தியக் குடிமக்கள் பலருக்கும் இந்தச் சொற்பொழிவு பயனுடையதாயிருக்கும் என்று நான் நம்புகிறேன். இந்த அரங்கில் உங்கள் அனைவரையும் என் முன்னே காண்பதில் நான் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். **வேதங்களின் மூலப்படிகள் நமக்குக் கிடைத்திருப்பது, பண்டை உலகின் சுவைமிகுந்த ஒரு பகுதியைப் பற்றிய பல்வேறுபட்ட செய்திகளை நாம் அறிந்துகொள்ள உதவுகிறது.** மேலும், ஒரு குறிப்பிடத்தக்க சூழ்நிலையில், நிலைமைகளில் மனித மனம், மனித அறிவு எவ்வாறு செயல்படுகிறது என்பதனையும் வேதங்கள் வெளிப்படுத்து கின்றன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியாவை அதன் சமுதாயத் தன்மை களை வைத்து நோக்கும்போது, பல்வேறு கூறுகளில், தற்கால இந்தியாவைவிட அது சிறப்புடையதாக விளங்கியது என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகிறது. தற்போது இந்தியா, **மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிட இப்போது நல்ல நம்பிக்கையுடன் இருக்கிறது.** மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இந்தியா, தவறுகளின், துன்பங்களின் குழந்தைப் பருவத்தில் இருந்தது. அச்சம் தரக்கூடிய வளர்ச்சியை அடைவதற்கு முடிவு செய்திருந்தது. சிந்தனையிலும் வழிபாட்டிலும் அது சொர்க்கத்தையும் பூமியையும் உருவாக்கிய அந்தப் பெரியோனுடைய காட்சியை இழந்துவிட்டது. உண்மை, ஒளி, அன்பு ஆகியவற்றின் மய்யப் பகுதியிலிருந்து, யூகங்களிலும் நடைமுறையிலும் இங்கும் அங்குமாக அது அலைந்து கொண்டிருந்தது. எங்கும், எல்லாமாகி நிற்கிற, எல்லா வல்லமையும் படைத்த கடவுளால் நெறிப் படுத்தப்பட்ட

ஓருலக முன் கருத்தியல் எண்ணம் அதற்கு இல்லை. **இயற்கையின் செயல்பாடுகளையும் அவற்றிற்குத் துணையாக இருப்பனவற்றையும் தெய்வத் தன்மை யுள்ளவைகளாக மாற்றி, இவற்றின் மூலவரின் குறிப்பான ஒப்புதலின்றி அவற்றின் முன்னே நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கிடந்தார்கள்.** புனிதச் சட்டங்களுடன் உறவுடைய ஒழுக்கத் தத்துவம் [நேர்மை உணர்வு] [இவை ஒன்றுடன் ஒன்று ஒப்புமைத் தொடர்புடையவை], ஒரு தெளிவற்ற கருத்தையே கொண்டிருந்தது. இந்த ஒழுக்கத் தத்துவம், உயிர்ப் பலிக்கு இன்றியமையாத இடம் கொடுத்திருந்த போதிலும், அது அதன் அடிப்படைக் கோட்பாட்டைக் கடந்து போய்விட்டது; பண்டைக் காலத்திய **மனிதரின் குற்றத் தன்மைகளுக்கேற்பத் தண்டனை வழங்கப்பட்டுப் பெருந் தொகை, கடவுளின் கருணையால் பெற்றுக் கொள்ளப்பட்டது. அக்கால இந்தியாவில் துதிபாடும் பாடகரும் புரோகிதரும் இருந்தனர். இவர்கள் செல்வத்தின் மீதும் புகழ்மீதும் பேராசைப்பட்டவர்கள். தங்களுக்கு அளவற்ற செல்வத்தை வாரி வழங்கியவர்களைப் பற்றி இவர்கள் வரம்பு மீறிப் புகழ்ந்து தள்ளினார்கள்.** ஜாதிய நிறுவனத்தால் உருவாக்கப்பட்ட அதிகாரத்தையும் தனிஉயர்நிலைத் தத்துவத்தையும் இவர்கள் முன்னிலைப்படுத்தி, அவற்றைச் செயற்படுத்தி நடைமுறை வழக்கமாக மாற்றுவதற்கு ஆயத்தமாக இருந்தார்கள்.

அக்கால இந்தியாவின் ராணுவ ஆட்சியாளர்கள் பல்வேறு நாடுகளையும் மக்களையும் வென்று அடிமைப்படுத்தினார்கள். மிகக் கொடுமையான அடக்கு முறைகளை அவர்கள் மீது ஏவி அவர்களைத் துன்புறுத்தினார்கள். அவர்களின் மத உரிமைகளைப் பறித்துக் கொண்டார்கள்; அவர்களும் மனிதர்களே என்ற பொதுவான இரக்க உணர்வுகூட இல்லாமல் அவர்களை மனிதர்களாகவே நடத்தவில்லை. தற்போது இந்தியா, வேதகாலம் தொடங்கித் தொடர்ந்து வளர்ந்து கொண்டு வருகின்ற தீமைகளின் உச்சநிலையில் இருக்கின்றதெனினும், அவற்றை அழிக்க முடியவில்லை என்றாலும், அவற்றைத் துணிவோடு எதிர் கொள்ளும் நிலையில் இருக்கிறது. அது இப்போது ஒன்றிணைந்திருக்கிறது. ஒரு பகுதி விருப்பத்தின் பேரிலும் மறுபகுதி வெற்றிகொண்ட முறையிலும் உலகின் அறிவாற்றல் மிகுந்த மனிதர்களை நேசிக்கின்ற கொடைக் குணமுள்ள நாடாக அது மாறியிருக்கிறது. ஓராண்டுக்கு முன்னர், ஒரு பொதுக் கூட்டத்தில் உரையாற்றிக் கொண்டிருந்தபோது இது தொடர்பான நன்மைகளை என்னால் நன்கு உணர முடிந்தது.

இதன் விளைவு என்னவெனில், வன்முறையிலிருந்தும் அடக்குமுறையி லிருந்தும் இந்தியா விடுதலை பெற்றதுதான்; சில மாவட்டங்களைத் தவிர; இந்தியா அதன் பின்னர் அமைதி, சட்டம் ஒழுங்கு, மத உரிமைகள், வாழ்த்துக்கள் ஆகியவற்றுடன் முன் எப்போதும், எந்த அரச மரபினரின் ஆட்சிக் காலத்திலும் இல்லாத அளவிற்கு நல்வாய்ப்புகளை அனுபவித்து மகிழ்ந்து வருகின்றது. கடந்த காலத்தில் ஏற்பட்ட தவறுகளையும் இடர்ப்பாடுகளையும் பொருட்படுத்தாது, இந்தியாவைத் தன் அன்பினாலும், தாய்மைத் தழுவுதலோடும் பிரிட்டன் அரவணைத்துத் தன் அன்பான வாழ்த்துக்களை வழங்குகிறது; எதற்காக இந்தியா கடுமுயற்சியுடன் போராடிக் கொண்டிருக்கிறதோ அந்த அமைதியைப் பெறுவ தற்கு நாம் வாழ்த்துகிறோம். தன் சுமைகளைக் குறைப்பதற்காகவும் சரிசெய்து கொள்வதற்காகவும் இந்தியா கடின உழைப்பை மேற் கொண்டிருக்கிறது; தன் வேளாண்மை வளங்களைப் பெருக்குவதற்காகப் பெருமுயற்சி செய்து கொண்டி ருக்கிறது. உலக நாடுகளோடு வணிக உறவை வளர்த்துக்கொள்வதற்காகப் பரந்து கிடக்கின்ற கடற்பரப்பில்அமைதியான வழிகளை அது தன் கப்பல்களுக்கு அமைத்துக் கொடுத்திருக்கிறது. மாவட்டத்தோடு மாவட்டத்தையும் மாநிலத் தோடு மாநிலத்தையும் சாலை வழியாகவும், பாலங்களின் வழியாகவும் மலைகளை அகழ்ந்து கணவாய்களின் வழியாகவும் அனைத்தையும் இந்தியா இணைத்திருக்கிறது. நீர்வழியாகவும், வான் வழியாகவும், தரைவழியாகவும் கடல் வழியாகவும் தகவல் தொடர்புகளை இந்தியா ஏற்படுத்தி வைத்திருக்கிறது. இவற்றையெல்லாம் கண்டு இந்தியக் குடிமக்கள் வியப்படைந்து நிற்கிறார்கள். மனிதகுல வளர்ச்சியில் தன் இனமரபுக் குடிமக்களையும் வளர்ச்சியை நோக்கி உயர்த்துவதற்கு இந்தியா முயன்று கொண்டிருக்கிறது.

ஓர் அறிவிழந்த மகன், உயிரோடுள்ள இறந்துபோன தன் பெற்றோருக்குச் சேர்த்து நெருப்பிடுபவன் கைகளைக் கட்டிப்போடுவது போல, ஜாதி உணர்வால், தன் குலப்பெருமையைக் காப்பாற்றக் கொடூரமான முறையில் பெண் குழந்தையைக் கொலை செய்யத் துடிக்கும் பெற்றோரின் கைகள் கைது செய்யப்பட்டுள்ளன. தவறான வழிகாட்டுதலுக்குள்ளாகி, துன்பத்திற்குட்பட்டுத் தன் சொந்த வாழ்க்கையை அழித்துக் கொள்ள முற்பட்டவன் தடுத்து நிறுத்தப் பட்டிருக்கிறான். கடவுளர்களுக்கும், பேய் பூதங்களுக்கும், மனித ரத்தத்தையும் மனித இறைச்சியையும் படைக்கும் பழக்கத்தையும், மது வகைகளைப் படைத்து வழிபடுதலையும் இந்தியா ஒரு முடிவுக்குக் கொண்டு வந்திருக்கிறது. நாடு முழுக்க நேர்மையான

நீதிமுறை கிடைப்பதற்கு அது பாடுபட்டுக் கொண்டி ருக்கிறது. காலந்தோறும் தனது ஆட்சிமுறையை நிர்வாகத்தை மேம்படுத்திக் கொண்டு வருகின்றது. கலை, இலக்கியம், அறிவியல் ஆகியவற்றில் இந்தியா அடைந்துள்ள வளர்ச்சி, தன் எல்லைப் பகுதிகளில் உண்மையையும் நம்பிக்கை யையும் பரப்புவதில் அது கடைப்பிடித்துவரும் நடைமுறையும் முன் எப்போதும் இல்லாத அளவிற்குச் சிறந்து விளங்குகிறது; அவற்றில் மிகுந்த கவனத்துடன் அது இருக்கிறது. பிரிட்டானிய இந்தியாவின் வரலாற்றுப் பதிவேடுகளில் கடந்த ஆண்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளுக்குப் பின்னர், இந்தியக் குடிமக்களில் ஒரு பகுதியினர், மாபெரும் பழியுடன் கூடிய கொடுமைத்தன்மையுடன், தங்களுக்கு நன்மை செய்து ஆதரித்தவர்களையே அழிப்பதற்கு முற்பட்டார்கள். இங்கே நான் பயன்படுத்திய கடினமான சொற்களை மாற்றிக் கொள்ளவா? இல்லை! இந்த நிகழ்ச்சிகளின் பொதுவான தன்மையுடன் அவற்றை உற்றுநோக்கும்போது, இறைப்பற்றுமிக்க ஒப்புதலுடன் நல்வாய்ப்பான நீதிமுறை வழங்குவது என்பது இன்னும் புகழ்வாய்ந்த ஒரு செயலைக் கருதியேயாகும். பிரிட்டானியர்களாகிய நமக்குக் கடந்த கால நிகழ்வுகள், நம்மைச் சுற்றியிருந்த சமூகவியல் சூழல்களைப் புரிந்துகொள்வதில் நாம் செய்த தவறுகளை நமக்கு வெளிப்படுத்திக் காட்டுகின்றன; அத்துடன் நமக்கும் அவற்றுக்கும் இடையே தொடர்புண்டாக்கி அவற்றை எதிர்கொள்ள வைத்தவர்களினால் நமக்கு ஏற்பட்ட குறைபாடுகளையும் அவை உணர்த்துகின்றன. ஆனால், அவை நம்முடைய இரக்க மனப்பான் மையையும் நற்செயல் விருப்பத்தையும் அன்புதவிகளையும் விரைவுபடுத்தி விட்டனவே தவிர அழித்துவிடவில்லை; மேலும் இந்தியாவின் மேம்பாட்டிற்காக நாம் உழைக்க வேண்டும் என்ற நம் உறுதிப்பாட்டிற்கு அவை வலிமை சேர்ந்திருக்கின்றனவேயன்றி நம் உறுதியைக் குலைத்துவிடவில்லை. அத்துடன் பரந்து விரிந்து கிடக்கும் பிரிட்டானியப் பேரரசின் உலைவில்லா நிலைத்த தன்மைக்கு அவை உரம் சேர்ப்பனவாக அமைந்துவிட்டன. இனிமேல், வளர்ந்து வரும் இந்தியாவின் அறிவுத்திறன், எப்போதும் இல்லாத அளவிற்கு, கடவுளின் பார்வைக்குக் கீழ் உள்ள நமது வலிமையை ஆற்றல் மிகுந்த அதிகாரத்தை உணர்ந்துகொள்ளும்; நம்முடைய அரசியல் அதிகாரம் பரந்து விரிந்துள்ள அனைத்து நாட்டு மக்களுக்கும் நாம் வழங்கும் நல்வாழ்த்துக்களை அது பாராட்டும். பிரிட்டானியப் பேரரசு இங்கு, பரிவுடனும் இரக்க உணர்ச்சியுடனும் பெருந்தன்மையுடனும் இன்னும் இருக்கிறது. படைவீரன் இங்கே இருக்கிறான்; அமைதியையும் சட்டம் ஒழுங்கையும் நிலைநிறுத்துவதற்காக

அவன் போராடிக் கொண்டிருக்கிறான்; போர் செய்வதற்காகவோ கொள்ளையடிப்பதற்காகவோ அவன், இங்கு நிற்கவில்லை; நம் ஆட்சியாளன் [நிர்வாகி] இங்கு இருக்கிறான்; பொதுமக்களின் வாழ்க்கையை முன்னேற்றுவதற்காகவும் நேர்மையான நீதி முறையை இந்த நாட்டு மக்களுக்கு வழங்குவதற்காகவும் அவன் கடுமையாக முயற்சி செய்து கொண்டிருக்கிறான்; வணிகன் இங்கே இருக்கிறான்; விளை பொருட்களைக் கொடுத்து அதற்கு மாற்றாக அவன் பெற முடியாததைப் பல்வேறு நாடுகளில் இருந்து பெறப்பட்ட பொன்னையும் வெள்ளியையும் கொடுத்து அவன் பெற்றுக் கொள்கிறான். பொறியாளர் இங்கே இருக்கிறார்; இயற்கையின் நுட்பங்களோடு இணைந்து, அதனால் வழிகாட்டப்பெற்று, நல்வாய்ப்புடன் கலை, அறிவியல் ஆகியவற்றின் உதவி ஆதாரங்களோடு, மதிப்பிடற்கரிய பொதுப் பணிகளை அவர் வடிவமைத்துச் செயல்படுத்தி வருகிறார்; மக்களின் பயன் பாட்டிற்கு அவை பேருதவியாக உள்ளன; இந்த நிறுவனத்தின் தலைவர் நமக்கு இங்கே காட்டியுள்ள கலையழகு மிகுந்த கட்டடங்களைப்போல! கல்வித்துறை ஊடகத்துறை சார்ந்த கல்வியாளர் இங்கே இருக்கிறார்; மதச்சார்பற்ற கல்வி யையும் அது தொடர்பான துணைக் கருவிகளையும் உலகில் முன்னேறியி ருக்கின்ற பல நாடுகள் பெற்றிருக்கின்ற அறிவு நுணுக்கங்களையும் அவர் இங்கே வழங்கி வருகிறார். அமைப்பு வழிப்பட்ட பார்ப்பனியச் சட்டங்கள் ஏற்படுத்தப்பட்ட காலத்திலிருந்து ஆரியர்களின் [வந்தேறிகளின்] இடமாக விளங்கும் இந்தியாவின் வடமேற்குப் பகுதியில் நிலவுகின்ற தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் ஆரிய நாகரிகமே காரணம் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

★★★★★★★★★★★

**அச்சுப் புத்தகங்களுக்கு**

[www.dravidianbookhouse.com](http://www.dravidianbookhouse.com)

[www.amazon.in](http://www.amazon.in)